

கு.ப.ராஜகோபாலன்

# காணாமலே காதல்

சரித்திரச் சிறுகதைகள்

# பொருளடக்கம்

முன்னுரை
1. இருளிலிருந்து
2. மகாபோதம்
3. ஆமிரபாலி
4. விபரீதக் காதல்
5. ராஜ பிக்ஷுணி
6. குந்தவையின் கைதி
7. காணாமலே காதல்
8. ராஜேந்திரன் கனவு
9. தமிழ் மங்கை
10. வெற்றிக்குப் பின்
11. தனயன்
12. கவி வேண்டிய பரிசு
13. வீழ்ச்சி
14. தியாக விக்ரகம்
15. அனார்க்கலி
16. துரோகமா?
17. லட்சிய வீரன்

இந்தப்புத்தகம் வெளியிட அனுமதி வழங்கிய ஜோதி நிலையம், திரு. ஏ. கே. ஜெயராமன் அவர்களுக்கும் உதவிய க. நா. சுப்ரமண்யம் அவர்களுக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

# முன்னுரை

கு. ப. ராஜகோபாலனின் கதைகளை, அவை எழுதப்பட்டு சற்றேறக் குறைய ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு இன்று படித்துப் பார்க்கும்போது கூட அவர் லாகவமும், கதை நடத்தும் திறனும், உருவ, கருத்து அமைதியுடன் மிகவும் சிறப்பாகவே உள்ளத்தில் தட்டுகின்றன. வாழ்க்கையை முழுப்பார்வையுடன் பார்ப்பது அவர்க்கு மிகவும் சிறிய கதைகளிலும் கூடச் சாத்தியமாக இருந்திருக்கிறது.

ஆண், பெண் உறவுகளை, பால் உணர்ச்சிகளை அப்பட்டமாக, உரக்க, மனத்தையும் கண்ணையும் ஒருங்கே உறுத்துகிற மாதிரிச் சொல்வது இன்று பலருக்கும் கைவந்த கலையாக இருக்கிறது. ஆனால், அதையே சூக்ஷ்மமாகச் செய்கிற காரியம், கலையுணர்ச்சியுடன் முழுவதும் சொல்லாமல் சொல்லிவிடுகிற காரியம் கு.ப.ரா.வுக்கு மிகவும் சிறப்பாக கைவந்திருந்ததை இன்று படிக்கும்போதும் உணர முடிகிறது. இந்த மென்மையும், கலை உணர்ச்சியும் பக்கம் பக்கமாக பச்சையாக எதை எதையோ எழுதுகிற தமிழ் எழுத்தாளர்களுக்கு எட்டாத ஒரு விஷயம். அவர்கள் கு.ப.ரா.விடம் பாடம் கற்றுக்கொள்ள வேண்டும்.

புத்தனுடைய துறவுக்கு அசுவகோஷன் முதல் எத்தனையோ இலக்கியாசிரியர்கள் பலர் காரணங்கள் கண்டு சொல்லிவிட்டார்கள். மூப்பு, நோய், சாவு என்ற மூன்றுடன் க்ஷண சுகத்திற்குப் பிறகு ஏற்படுகிற விரக்தியும் ஒரு காரணமாக, இந்தத் தொகுப்பில் முதல் கதையில் முதல் வாக்கியமாக அமைந்துள்ள நாலாவது காரணம் நியாயமானதாகவும், செயல்பாடுள்ளதாகவும் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னும் தோன்றியது - இன்று மீண்டும் படிக்கும்போதும் தோன்றுகிறது.

பதினேழு கதைகளில் பதினேழு புதுப்புது அனுபவங்களை முழுமையாக நமக்கு உண்டாக்கி உருவாக்கித் தருகிறார் கு. ப. ராஜகோபாலன். ஸுஜாதா புத்தனுக்கு பதினெட்டு நாட்கள் கடும் தபசுக்குப் பிறகு அளித்த பால்சோறு (அது கருணையின் உருவகமாகவே) கு.ப.ராவின் கதையில் அவருக்கு மகாபோதத்தை விளைவிக்கிறது. டெஸ்டிமோனா மனதில் ஒத்ததெல்லோவிடம் காதல் வித்து தோன்ற அவன் பிரதாபங்கள் உபயோகப்பட்ட மாதிரி அதுவரை கண்ணால் பார்க்காத வேங்கி மன்னனிடம் காதல் வருகிறது குந்தவைக்கு. தர்மயுத்தம் என்கிற தத்துவம் என்ன என்று சிவாஜியின் வீரப்போர்கள் விளக்கியதைக் கடைசிக் கதையில் எடுத்துக்காட்டுகிறார் கு.ப.ரா.

சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட சிறுகதைகள் இப்படித்தான் அமையவேண்டும் என்று கூறுவது போல அமைந்திருக்கின்றன கு.ப.ராவின் சரித்திரக் கதைகள் பதினேழும். இவற்றில் ஒரு ஆச்சர்யக் குறிக்குக்கூட இடம் தரவில்லை அவர். ஆச்சர்யக் குறிகளுக்கும் உரத்த குரலுக்கும் படோடாபத்துக்கும் ஆர்ப்பாட்டத்துக்கும் அர்த்தமற்ற வார்த்தைகளுக்கும் நம்மை ஆளாக்கிவிட்டார்கள் பிற்காலத்தில் சரித்திரக் கதை என்று எழுத வந்த எழுத்தாளர்கள். அவர்கள் எழுத்து இலக்கியமாகவில்லை. கு.ப.ராவின் எழுத்துக்கள் பெருமளவில், மேன்மையான தளத்தில் இலக்கியமாகின்றன என்பது நமக்குப் புரியவருகிறது. கனகாம்பரம் என்கிற கதையை கு.ப.ரா. எழுதியபோது இந்த மாதிரியெல்லாம் கதைகள் எழுதக்கூடாது என்று ரசனையற்ற குரலில் அப்போதைய தமிழ்நாட்டு அரசியல் தலைவர் கூறினார் என்பதை நினைக்கும்போது இந்தத் தலைவருக்கும் அவர் கோஷ்டியினருக்கும் என்ன மரமண்டை என்று நினைக்கவே தோன்றுகிறது. இலக்கியம் இந்த சட்டாம்பிள்ளைகளையெல்லாம் மீறி நிற்கிறது என்பது நிதர்சனமாகவே தெரிகிறது. 'திரை' என்கிற கதையை கு.ப.ரா. எழுதியபோது "கணவனில்லாத தாயைப் பற்றிய கதையா? வேண்டாம். நீதி கெட்டுவிடும்" என்று சொன்ன இலக்கிய சட்டாம்பிள்ளைகள் இன்று இலக்கிய கர்த்தாக்களாக உயிருடன் இருந்தாலும் நீடிக்க முடியவில்லை. முருக பக்தர்களாகத்தான், அரசியல் தலைவர்களாகத்தான் தெரியவருகிறார்கள்.

நல்ல எழுத்து எல்லாமே, இலக்கியமாகும்போது புரட்சிகரமாகவும் அமைகிறது என்பது கு.ப.ரா.வின் எழுத்துக்களில் தெரியவருகிறது. புரட்சி என்கிற ஆசையில் எழுதவில்லை அவர். மனிதன் என்கிற நினைப்பில் எழுதினார். சரித்திர புருஷர்கள் பற்றி எழுதுவது இதில் ஒரு அம்சம். இதிலும் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து, சிலவற்றை விட்டுவிட்டு, புரட்சிகரமாகத் தெரிந்த விஷயத்தையும் கையாள முடியும் என்பதற்கு இந்தப் பதினேழு சரித்திரக் கதைகளும் சான்றுகள்.

கு. ப. ராஜகோபாலன் தனது நாற்பத்தியிரண்டு ஆண்டுகளில் (1902-1944) பலவிதமான இலக்கியச் சோதனைகள் செய்துபார்த்தவர். சிறுகதைகள், சிறு நாடகங்கள், சிந்தனை உலகப் போக்கு, இலக்கிய விமர்சனம், வசன கவிதை, சரித்திரம் என்று பல சோதனைகள் செய்துபார்த்தவர். அற்புதமான சில மொழிபெயர்ப்புகளும் செய்திருக்கிறார். இலக்கியம் பற்றி தெளிவான பல அபிப்பிராயங்கள், கொள்கைகள் அவருக்கிருந்தன. எல்லாவற்றிற்கும் மேலாக தமிழில் எழுத, இலக்கியம் படைக்க முன்வருபவர்களின் எதிர்காலத்தில்

அவருக்கு ஏராளமான நம்பிக்கையிருந்தது. தான் எனும் அகங்காரமில்லாமல் பலருக்கும் வழிகாட்டியவர்; கை கொடுத்தவர். எல்லா பனித்துளிகளிலும் முழுச்சூரியனும் தெரிகிற மாதிரி அவர் எழுத்துகளில் மிகவும் சுலபமானவை, சிறியவைகளிலும் கூட அவருடைய முழு தனித்வத்தையும் பார்க்க முடியும். அவருடைய கதைகள் மற்றும் எழுத்துக்கள் மீண்டும் தமிழர் தலைமுறைகளுக்குப் படிக்கக் கிடைக்கின்றன என்பது பற்றி மிகவும் சந்தோஷப்படலாம்.

இந்திய சரித்திரத்தின் பல சம்பவங்கள் இந்த நூலில் கதைகளாகப் புனையப்பட்டுள்ளன. ஆனால் இதில் பெரிய அம்சம் இதுவல்ல. இந்தப் பதினேழு கதைகளையும் படிப்பவர்களுக்கும்கூட கு. ப. ராஜகோபாலன் என்கிற "முழுமை" தெரிகிறது என்பது இந்தக் கதைகளின் பெரிய விஷயம். மற்றப்படி இந்தத் தலைமுறை வாசகர்களும் வரப்போகிற தலைமுறை வாசகர்களும் இந்த நூலைப் படித்ததுப் பற்றிப் பெருமைப்படக்கூடிய அளவில் ஒவ்வொரு கதையிலும் பல அம்சங்கள் இருக்கின்றன. படித்துப் பார்த்து அனுபவித்து நினைவுபடுத்திக்கொள்பவர்களும் மீண்டும் ஒருதரம் படித்துப் பார்ப்பவர்களும் நம்மிடையே அதிர்ஷ்டசாலிகள் என்று நான் சொல்வேன்.

க. நா. சுப்ரமண்யம்

மயிலை, சென்னை.
விஜயதசமி, 1987.

# 1. இருளிலிருந்து

க்ஷண சுகத்திற்குப் பிறகு ஏற்பட்ட அந்த ஆழ்ந்த வெறுப்பு அவருடைய உள்ளத்தைக் கிளறிவிட்டது. யசோதரை அப்படியே தூங்கிவிட்டாள். சித்தார்த்தனுக்குத் தூக்கம் கொள்ளவில்லை. கட்டிலிலிருந்து எழுந்து அறையில் உலவினார். சுகத்தைப் பற்றியும் துக்கத்தைப் பற்றியும் அவர் எண்ணங்கள் மேன்மேலும் உயர்ந்து கிளம்பின. ஆரோக்கியமும் யௌவனமும் சுகபோதை கொடுக்கும் மதுவாக இருக்கின்றன. சரீரத்திலிருந்து அந்த மது குறைந்தால், நோயும், மூப்பும் – மரணமுங்கூட - துக்க பரம்பரையாகத் தோன்றுகின்றன. எது நிரந்தரம்? சுகம் நிச்சயமாக நிரந்தரமன்று; ஆனால் துக்கமும் நிரந்தரமன்று. சுகமென்னும் வெள்ளப்பெருக்கு எப்பொழுதும் துக்கமென்ற சாகரத்தில் போய்த்தான் முடிவடைகிறது. சுகமே துக்கத்திலிருந்துதான், சிரமத்திலிருந்துதான் உற்பத்தியாகிறது. சொல்லப்போனால் சுகம் நிச்சயமில்லை. நோய், மூப்பு, மரணம் - இவை நிச்சயம். சுகம் கொஞ்சம்; துக்கந்தான் அதிகம். எதற்காக இந்தத் தாரதம்மியம்? சுகம் ஏன் நசிக்கிறது? துக்கம் ஏன் நீடிக்கிறது? துக்கம் ஏன் சதா சுகத்தின் இறுதியில், மாலையின் இறுதியில் மையிருட்டுப்போல, தென்படுகிறது? துக்கம் தொலையக்கூடியதா? துக்கமற்ற சுகம் உண்டா? அது எது?

யசோதரையிடம் நான் பெறும் இன்பம் நீடிக்கவில்லை. ஏன்? யாசோதரையின் அழகே இன்பத்திற்குக் காரணம், அது நீடிக்காதே! அதன் பூரணப்பிரபையை மூப்பு வந்து ராகு போலக் கிரஹிக்கும். கிருஷ்ண பக்ஷத்தின் சதுர்த்தசி போல மரணமே வந்து அதை அபகரிக்கும். அவளுடைய காதல்? - அதுதான் நீடிக்குமா மரணத்தின் முன்பு?

ராஹுலனின் இளமையையும் அழகையும் பார்க்கும் பொழுது எனக்கு இப்பொழுது சந்தோஷமில்லை. மூப்பின் ஞாபகம், மரணத்தின் ஞாபகந்தான் வருகிறது. சௌந்தரியமே எனக்குச் சாவைத்தான் நினைப்பூட்டுகிறது; சாவுதான் உண்மை. அழகும் அன்பும் உண்மையல்ல.

அது கூடாது, சாவு உண்மையாகக் கூடாது! அழகும், அன்பும் அழியக்கூடாது, அவை தோன்றி மறைவதென்றால், பருவத்தின் புஷ்பங்கள் போல மலர்ந்து உதிர்ந்துபோவதென்றால், வாழ்க்கைக்கு அர்த்தம் இல்லை. அவற்றை ஓர் அம்சத்தில் உலகத்தில் நிலைநிறுத்த வேண்டியது அவசியம். முயற்சி செய்தால், அது முடியுமானால், என்ன

சிரமந்தான் படக்கூடாது? நான் படுகிறேன், அந்தச் சிரமம். தேவையானால் என் சுகத்தையே - வாழ்க்கையையே, அதற்குத் தியாகம் செய்கிறேன்.

சித்தார்த்தனுடைய ஹிருதயத்தைத் துயரம் எட்டிக்கூடப் பார்க்க முடியாமல் பாதுகாத்துக்கொண்டு வந்தார் அவருடைய தகப்பனாரான சுத்தோதனர்; துக்கம் என்ற களங்கத்தையே அறியாத துல்லியமான உள்ளம் படைத்தவனாகத் தம் மகனை வளர்த்தார்.

மகன் கண்முன் வறுமை தென்படக் கூடாதென்று ஆக்ஞாபித்தார்; நோயின் குரலோ, காட்சியோ அவர் அருகிலேயே இருக்கக்கூடாதென்றும் கட்டளையிட்டார். மூப்பின் முதிர்ந்த களைப்புங்கூட அவர் மனத்தைக் கிளறக்கூடாதென்று ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தார்.

இவ்வளவு முன்னெச்சரிக்கைகளுடன் கூடிய அந்த வாழ்க்கையால் சித்தார்த்தருடைய நினைவுகள் போக்கற்று, சுக திக்கிலிருந்து திரும்பி வாழ்க்கையின் மூலாதாரங்களைப் பிறப்பிலும் இறப்பிலும், வளர்ப்பிலும், இளைப்பிலும், ஊக்கத்திலும், நினைப்பிலும் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தன. சாதாரணமாக அவரை, எல்லோரையும் போல வாழ்க்கையில் அடிபடும்படி விட்டிருந்தால் அவர் புலன் அவ்வளவு தீக்ஷண்யமாயிருந்திராது; வாழ்க்கையின் மேடு பள்ளங்களில் நடக்காததாலேயே அவர் மனம் மேலும் மிருதுவாகிப் புஷ்பப்பாதையிலேயே புண்பட்டது.

உலகத்தில் தினசரி கண்ணில் படும் கொடுங்காட்சிகளை அடிக்கடி பார்த்து உள்ளத்தின் உணர்ச்சிகள் கூர்மை மங்கிப்போயிருந்தால், அவர் மனம் பிறகு அவ்வளவு பாடு பட்டிராது. அப்பொழுதுதான் மலர்ந்த மொக்கின் ஹிருதயம் போல அவர் ஹிருதயம் சதா காற்றுப் படாது புத்தம் புதிதாகவே இருந்ததால் அதன் மூச்சே அதைப் புடைத்து, தொட்டாற்சுருங்கியைப் போலச் சுருங்கச் செய்தது.

அவருடைய இன்பக்கனவின் இறுதியில் ஒரு சலிப்பும் ஓய்ச்சலும் உணர்ச்சிச் சாவும் ஏற்பட்டதைக் கண்டதுமே அவருக்கும் வெளியுலகத்துக்கும் நடுவே இருந்த திரையில் ஓர் ஓட்டை விழுந்துவிட்டது. அவ்வளவுதான். அதன் வழியாக வாழ்க்கையின் துன்பப்புயல் புகுந்து பாய்ந்து அவரைத் தாக்கிற்று.

அதனால்தான் துன்பமும் நோயும் மூப்பும் சாவும் சித்தார்த்தரை வேறு யாரையும் கலக்காத முறையில் கலக்கின. உலகத்தில் வேறு யாருமே திகைப்புக் கொள்ளாத வகையில் அவர் வாழ்க்கையின்

துவந்துவங்களைக் கண்டு திகைப்பு கொண்டார்.

அந்தத் துவந்துவங்களின் மூலங்களை ஆராய்ந்து களைந்தெறியாத வரையில் வாழ்க்கையில் அழகும் அன்பும் க்ஷண சுகங்களாகத்தான் இருக்கும் என்ற எண்ணம் அந்த நள்ளிரவில் அவருக்குத் திடீரென்று தோன்றிற்று.

இன்ப மயக்கம் அளிக்கும் பலவித வாசனைகள் கட்டியது போன்ற அந்தப் பள்ளியறையின் சாளரத்தைத் திறந்து வெளியே பார்த்தார். அவர் உள்ளமும் தன் ஒற்றைக் கதவைத் திறந்துகொண்டு வெளியே பார்த்தது.

இரவு, மரணத்தின் கோர ஸ்வரூபம் போல, மௌன தாண்டவம் செய்துகொண்டிருந்தது. வாழ்க்கையே ஒரு மந்திர சக்தியில் ஏங்கிக் கிடக்கும் பொழுது அதன் ஹிருதயத் துடிப்புப்போலச் சுவர்க்கோழிகள் இடைவிடாமல் சத்தம் செய்துகொண்டிருந்தன. எங்கும் மேகம் கவிந்து இருள் நிறைந்திருந்தது.

திடீரென்று சித்தார்த்தன் தன் வாழ்க்கைப் பள்ளியறையின் சிறுமையையும் வெளியுலகத்தின் விஸ்தாரத்தையும் ஒப்பிட்டுப் பார்த்த பொழுது அவருக்குச் சிறியதில் ஒரு வெறுப்பும் பெரியதில் ஓர் ஆழ்ந்த இரக்கமும் ஏற்பட்டது. சுகவாசனையும் அழகொளியும் ஏறிய அந்த அறை, சுற்றிலுமிருந்த சோக இருளில் ஓர் அணுப்போலத் தென்பட்டது. அந்த ஒளியிலிருந்து பாய்ந்து அந்த இருளில் குதித்துவிட வேண்டுமென்று அவர் உடனே வேட்கை கொண்டுவிட்டார்.

அந்த மகத்தான முகூர்த்தத்தில் அவருக்கு மனைவி நினைவும் மகன் நினைவும் அற்றுப்போயின; தன் நினைவு கூட அற்றுப்போய்விட்டது; அந்த ஒளியுலகத்துடன் தனக்கு இருந்த பற்று அந்த நிமிஷம் அறுபட்டு விழுந்ததைக் கண்டார்.

முன்னே கிடந்த முடிவற்ற இருள் அவரைக் கூவி அழைத்தது, பொங்கி வழியும் அலைகள் போல.

தகப்பன் கட்டிவைத்த இன்பச்சிறையால் சித்தார்த்தரைக் கட்டுப்படுத்த முடியவில்லை; யசோதரையின் அழகும் ராஹுலனின் அன்புங்கூட அவரை அப்பொழுது அசைக்க முடியவில்லை. அவற்றின் வேரற்ற தன்மை அவருக்கு அந்த நிசியில் வெட்டவெளிச்சமாகிவிட்டது.

மௌனமாக, நிச்சய புத்தியுடன், அந்த ஒளி மாளிகையைவிட்டு வெளியேறினார். வாழ்க்கையின் இருட்பாதையில் இறங்கினார்.

சந்திரோதயமாயிற்று; மேகங்களிலிருந்து விடுபட்ட சந்திரன் உச்சி

வானில் தோன்றினான்.

- கலைமகள், மே-1939

# 2. மகாபோதம்

அன்று பௌர்ணமி; ஸுஜாதை 'வெள்ளென' எழுந்திருந்து பசுவைக் கறந்து, பால் காய்ச்சிப் பாலன்னம் தயாரித்தாள். தன் காதலன் உடம்பு கலகலப்பாக ஆக வேண்டுமென்று இஷ்ட தேவதையை வேண்டித் தொழப் புறப்பட்டாள்.

ஸுஜாதை அந்த அதிகாலைப் பொழுதில் உருவெடுத்து வந்த உதயகன்னி போலவே இருந்தாள். சிவப்பு உடலில் மஞ்சள் பட்டாடை உடுத்திருந்தாள். கோவிலுக்குப் போவதால் நீராடி நெற்றிக்கிட்டுக்கொண்டு, தூய்மையே நடந்து செல்லுவது போல இருந்தாள். பாலும் இனிப்பும் போலக் கலந்து, அழகும் பருவமும், அவள் முகத்தில் தெளிவை நிரப்பின. அதில் கம்பீரமும், அமைதியும் சாந்தமும் தென்பட்டன. அவளுடைய நடையிலேயே ஓர் அடக்கமும் பெருக்கும் இருந்தது.

அவள் கோவிலுக்குப் போகும் வழியில்தான், நைரஞ்ஜரைக் கரையில் அந்த அரசமரம். அதன் அடியில்தான் சுவர்ண விக்ரகம் போன்ற போதி சத்துவ வடிவம் கல் போலச் சமைந்து, தவத்தில் இருந்தது. கண் மூடிய அந்த மோன முகத்தில் சொல்லொணாத் துயரம் தேங்கி இருந்தது. மூடியிருந்த அந்த விசாலமான கண்ணிமைகளில் என்ன சாந்தம், எவ்வளவு அமைதி! பத்மாஸனத்தில் அமர்ந்திருந்த அந்த உருவமே, அந்த இடத்தில் கோவில் கொண்டெழுந்த ஒரு ஜோதிலிங்கம் போல இருந்தது. அதைக் கண்டு கண்டு ஸுஜாதை பல நாட்களாக பிரமித்திருக்கிறாள். கிராமத்தார்கள், வழிப்போக்கர்கள் எல்லோரும் 'யாரோ தபஸ்வி, சாது!' என்று திரும்பிக்கூடப் பார்க்காமல் போய்விடுவார்கள். ஸுஜாதைக்கு மட்டும் அந்த ஒளி வடிவத்தைக் கண்ட நிமிஷ முதல், அதனிடம் ஒரு லயிப்பு ஏற்பட்டுவிட்டது. கொடுமையான தவத்தில் இறங்கிய அந்த மகா துக்கத்தைக் கண்டதும், அவள் மனதில் ஒரு மகத்தான இரக்கம் சுரந்தது.

## 2

தூரத்தில் நின்று அந்த மௌன மூர்த்தியை ஆழ்ந்து கவனித்து உருகுவாள். அசைவற்ற அந்த வலிமையைக் கண்டு பிரமித்துப் போவாள். அன்று அவள் கண்ட காட்சி அவளை மெய்ம்மறக்கச் செய்தது.

மகாபிநிஷ்கிரமணத்திற்குப் பிறகு சித்தார்த்தன் 'எத்தைத் தின்றால்

பித்தம் தெளியும்' என்றது போன்ற வேட்கைகொண்டு, உண்மையைக் காண எல்லா வழிகளையும் பின்பற்றி, ஒவ்வொன்றாகப் பரீக்ஷை பார்த்தார். நாடு, வீடு, மனைவி, மகன், பந்துக்களைத் துறந்தது முதல் வழி; ஆபரண அலங்காரங்களைத் துறந்தார்; தம் உடைவாள் கொண்டு தம் சிகையை அறுத்துக்கொண்டார். ஆகாராதிகளைக் குறைத்து நியமத்திற்குக் கொண்டுவந்தார்; தாபஸர்களைத் தேடிச் சென்று அவர்களுடன் பழகிப் பார்த்தார். எங்கும் உண்மையைக் காணோம். எங்கும் அகங்காரம், காமம், மமதை, குரோதம் முதலியன மண்டிக் கிடந்தன.

அலைந்து அலைந்து பார்த்துக் களைத்துப் போய், ஸத்சங்கத்தில்கூடத் தெளிவு ஏற்படாதது கண்டு, வெறுப்புற்று, சித்தார்த்தன், கடைசியாக நைரஞ்ஜரைக் கரையில் ஒரு அரச மரத்தடியில் உட்கார்ந்துவிட்டார். இருபத்தெட்டு நாள் அல்லும் பகலுமாக, அந்த மரத்தடியில் உட்கார்ந்த வண்ணம் யோசனை செய்தார். அறிவுத்தாகம் மேலிட்டு மெய்ம்மறந்தார். உண்மையை அறிய வேண்டும் என்ற ஆவேசம் மேலிட்டு, மூச்சையும் பேச்சையும் நிறுத்தினார். இருபத்தெட்டு நாட்களில் உடல் இளைத்து காஷ்டம் போல ஆயிற்று. ஆனால் அப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாக அறிவு தெளிவாகிக்கொண்டு வந்தது. நெருப்பின் மேல் இருக்கும் சாம்பல்போல, உடல் சதை அகல அகல, உள் ஜோதி விளக்கம் கொண்டது. சரீரம் இளைக்க இளைக்க, ஞானம் பெருகிற்று.

அப்பொழுதுதான் அவருக்கு ஓர் ஒளி தெரிந்தது. எங்கெங்கோ தேடித் திரிந்த உண்மையை, அங்கேயே, தனதுள்ளேயே காணலாம் என்று ஊகம் செய்ய முடிந்தது முதல்முதலாக.

இருபத்தொன்பதாம் நாள் காலையில் உதயத்தின் ஒளியோடு ஒளி மங்கையாக ஸுஜாதை வந்தாள்.

## 3

அவள் ஓர் இடைப்பெண். பலனென்னும் இடையனின் மகள். இஷ்ட தேவதைக்குப் படைப்பதற்கான பாலன்னம் அவள் கையில் இருந்தது.

அன்று சாக்கிய முனியின் சுத்தத் தவ வடிவம் அவள் மனதை விசேஷமாகக் கொள்ளை கொண்டது. மெலிந்துபோன அந்த மேனியை அன்று கண்டதும் அதனிடம் ஒரு மகா ப்ரேமை கொண்டாள் அவள். மட்டற்று அவள் உள்ளத்தில் சுரந்த இரக்கம் அன்று கட்டு மீறிற்று.

காதலனை மறந்தாள் ஸுஜாதை. தன் நிலையை மறந்தாள்; வழிபடும்

கடவுளையே மறந்தாள். வேற்றுமையையும் மறந்தாள். இருபத்தெட்டு நாள் உபவாஸத்தால் வாடிச் சோர்ந்துபோன அந்த இளம் முகத்தைக் கண்டு இளகினாள். திடீரென்று அருகிற் சென்று, தைரியமாக பாலன்னத்தை எடுத்துத் தன் கையாலேயே குழந்தைக்கு ஊட்டுவது போல ஊட்டினாள். அந்த அன்னத்துடன் ஸுஜாதை புத்தனுக்கு மகாபோதத்தையும் ஊட்டினாள்.

ஒளி கொண்டுவந்த அந்த உத்தம ஸ்வரூபத்தினிடமே அவர் உண்மையைக் கண்டார். பிரேம பூரிதமான அந்த தயை உருவம், துக்க நிவாரணத்தையே முடிவாகக் கொண்ட சத்திய சதுஷ்டயத்தைப் பளிச்சென்று அவருக்கு விளக்கிக் காட்டிற்று.

ஆமாம்! துக்கம் ஓர் உண்மை. அதன் காரணமான துக்கோற்பத்தியும் உண்மை; அதன் பலனான துக்க பரம்பரையும் உண்மை. துக்க நிவாரணம் இந்தத் தொடர்பின் முடிவு. அதுவும் உண்மையாகத்தான் இருக்கவேண்டும். ஸுஜாதை புத்தனுக்கு அதைத்தான் விளக்கினாள். பிறப்பு இறப்புக்களிலிருந்து துக்கத்தைப் பிரித்து எடுக்க முடியாது. வாழ்க்கையில் துக்கக் கலப்பற்ற ஆனந்தம் என்பது இருக்க முடியாது. எனவே உண்மையை அறிந்தவர்களுக்கு துக்க நிவாரணம் என்ற ஒரு மார்க்கம்தான் இருக்கிறது.

ஜீவகாருண்யமும் அஹிம்ஸையும்தான் புத்தன் கண்டறிந்த தத்துவத்தின் சாரம்.

ஸுஜாதை ஊட்டிய அன்னம் புத்தனுடைய சோர்வை அகற்றித் தெளிவு கொடுத்தது. கண்களைத் திறந்து பார்த்தார். ஸுஜாதையைக் கண்டு ஆத்மசாந்தி பெற்றார்.

அன்பே அவர் முன் நின்றது போல் நிம்மதி அடைந்தார். அன்பு வெற்றி அளிக்கும்; அன்பு பிறப்பின் தோல்வியை அகற்றும். அன்பு அன்னம்; அன்பு உயிர்.

சித்தார்த்தன் தவத்திலிருந்து துள்ளி எழுந்தார்; போதி சத்துவ ஸ்வரூபமாக வெளியேறினார். அன்பென்ற அதிசய சமயத்தைப் புகட்டக் கிளம்பினார். உலகம் ஒருமுகமாக எழுந்து அவரைப் பின்பற்றிற்று.

- ஹநுமான், ஆண்டுமலர், 1939

# 3. ஆமிரபாலி

வைசாலி நகரமே அன்று ஒரு விதமான ஆனந்தத்தில் மூழ்கியிருப்பது போலத் தென்பட்டது. ஊரெங்கும் அதே பேச்சுத்தான். அரசன் பிம்பஸாரன் அரண்மனை அந்தப்புரத்திலும்கூடப் பெண்கள் ஒருவித பரபரப்புடன் அவருடைய வருகையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ராஜபிக்ஷு புத்த பகவான் வைசாலி நகரத்திற்கு வருவதற்கு முன்பே அவருடைய புகழ் முன் சென்று அங்கே பரவிவிட்டது. ஏன், நாடெங்கும் அவருடைய அதிசயச் செயல்களைப் பற்றியும் அமானுஷ சக்திகளைப் பற்றியும், ஜனங்கள் பயத்துடனும் பக்தியுடனும் பேசினார்கள்.

அவருடைய அருள்மொழிகளின் அதிசயமான ஆறுதல் ஒருபுறமிருக்க, அவருடைய மூர்த்தி தரிசனமும் பாத ஸ்பர்சமும் கண்பார்வையுமே ஜனங்களுக்கு அபூர்வ அமைதியையும் ஆதரவையும் அளித்தன. அவருடைய தரிசனம் அவர்களுக்கு வாழ்க்கையின் புனிதத்துவத்தைப் பளிச்சென்று எடுத்துக்காட்டிற்று. அவர் சென்றவிடமெல்லாம் நோய், துன்பம் முதலிய பிசாசுகளும் அசுராம்சங்களும், ஒளியைக் கண்ட இருள்போல அகன்றன.

அப்பொழுது பகவானுக்கு வயசு எண்பது. உயர்ந்த தேகம் தவ ஒளியில் தங்கம் போல இருந்தது; அந்த உடம்பைச் சுற்றி மஞ்சள் வஸ்திரம் இளஞாயிற்றைச் சூழ்ந்த அருணோதய மேகங்கள் போலத் தென்பட்டது. முகத்திலும் தலையிலும் மயிர் நரைத்து வெண்மையாக இருந்தது. சங்கத்தின் நியமப்படி முண்டனம் செய்துகொண்டிருந்தார்.

அவருடைய உபதேசம் அப்பொழுது எங்கும் பிரபலமாகியிருந்தது. அவர் அந்தத் தடவை வைசாலிக்கு வந்த பொழுது அவருடன் பல புனிதமான சிஷ்யர்கள் இருந்தார்கள். யசோதரையும் ராகுலனும் கூட பிக்ஷுணி, பிக்ஷுக்களாக அவரைப் பின்பற்றினார்கள். பூர்வாச்ரமத்தில் அவருக்கு நெருங்கியிருந்த அவர்களுடைய ஞானோதயத்தின் பிறகுதான் அவருடைய உபதேசமே பரிபூர்ண பலனை அடைந்தது.

அன்று ராஜகிருகத்தில் பிக்ஷை ஏற்பாடாகியிருந்தது. பகவான் நகரத்திற்கடுத்தாற்போலிருந்த மாந்தோப்பில் இறங்கியிருந்தார். அங்கிருந்து அவர் மறுநாட்காலை பத்து மணிக்குப் பட்டணப் பிரவேசம் செய்யவேண்டியதென்று பிம்பஸாரன் முன் ஏற்பாடு. அரசன் தானே கோட்டை வாசலுக்குச் சென்று வரவேற்பதென்று தீர்மானித்திருந்தான். அவனுடைய பட்டமகிஷி அந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்த வண்ணம்

புளகாங்கிதமாகியிருந்தாள்.

பகவானின் விஜயத்தைப்பற்றி ஆமிரபாலியும் கேள்விப்பட்டாள். அவருடைய சரித்திரத்தை அவள் கேட்ட பொழுதெல்லாம் அவள் உள்ளம் நிறைவு பெற்றது. அவளறியாத ஓர் அபூர்வ ஆனந்தம் அவளுக்கு ஏற்பட்டது, அவருடைய பெயரைக் கேட்டபோதே.

அவள் வைசாலி நகரத்தில் பிரதம தாஸி. அழகிலும் ஐசுவரியத்திலும் அவளுக்கு ஈடு அங்கு யாருமே கிடையாது. கலைஞர்களும் கனவான்களும் அவளுடைய கடாஷத்தை நாடி அவள் வாசலில் காத்துக் கிடந்தார்கள். அரசனுக்கே அவளிடம் ஒரு மோகம்.

ஆனால் சில தினங்களாகவே அவள் யாரையும் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. புத்தன் மாந்தோப்பிற்கு வந்தது முதலே அவளுக்கு ஓர் ஏக்கம். ஆவல், அவரைக் காணவேண்டுமென்று. தன் காதலனான ஓர் ஓவியக்காரனை மட்டும் கண்ணெடுத்துப் பார்த்து புத்த பகவானின் உருவப்படம் ஒன்றைச் சித்தரித்து வரும்படி உத்தரவிட்டாள். அவன் மாந்தோப்பிலிருந்த மகா தபஸ்வியின் சாயலை அப்படியே வர்ணத்தில் பிடித்துக்கொண்டு போய் அவளிடம் கொடுத்தான்.

அதை வைத்துக்கொண்டு வியப்பில் ஆழ்ந்தாள் அவள். அதைப் பார்த்துப் பார்த்து பரவசம் கொண்டாள். அந்த உருவத்திலிருந்து பிறந்து வந்த சாந்தி அவளுடைய உள்ளத்தை நிரப்பி, அவள் என்றும் பெற்றிராத ஒரு திவ்யமான நிம்மதியை அளித்தது.

பிரபுவைத் தன் வீட்டிற்கு அழைத்து அவர் பாதத்தைத் தொட்டுப் பேரின்பம் பெறவேண்டுமென்று அவள் துடித்தாள். ஆனால் பகவான் தாஸியான தன்னைக் கண்ணெடுத்துப் பார்ப்பாரோ என்று அவளுக்குச் சந்தேகம்.

தோழி ஒருத்தியைத் தோப்பிற்கு அனுப்பி சிஷ்யர்களிடம் கேட்கச் சொன்னாள். சிஷ்யர்கள் அவள் தைரியத்தைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள். பகவானிடம் சொல்லக்கூட யோசனை செய்தார்கள்.

யசோதரைதான் கடைசியாக தைரியமாக முன்வந்து அந்த வேண்டுகோளை அவரிடம் தெரிவிக்க ஒப்புகொண்டாள். புத்தன் அதைக் கேட்டுப் புன்னகை புரிந்தார். சிஷ்யர்கள் திகைத்துப்போனார்கள். அவருடைய திருப்தி அவர்களுக்கு அர்த்தமாகவில்லை. அவர் பார்வையில் அப்பொழுது தென்பட்ட தயையும் இரக்கமும் சிஷ்யர்கள் வாயை அடைத்துவிட்டன.

“ஆமிரபாலியின் அன்பு பிசைஷயை நாம் ஏற்றுக்கொள்ளுவோம்!”

என்று புத்தன் சொன்னார்.

போதிசத்துவன் ஒரு தாசியிடம் பிசைக்ஷ பெறுவதா என்று சிஷ்யர்கள் பரபரப்புக்கொண்டார்கள். அவ்வளவுதூரம் தன் உபதேசத்தை கிரகித்தும், அவ்வளவு வருஷங்கள் தன்னுடன் கூடவிருந்து சத்திய மார்க்கத்தில் பழகியிருந்தும், அவர்களுக்குப் பக்குவம் ஏற்படாததைக் கண்டு புத்தன் விசனமடைந்தார்.

“ஆனால் நாளைக்கு ராஜ கிருகத்தில் பிக்ஷை இருக்கிறதே!” என்று ஆட்சேபித்தார்கள் அவர்கள்.

“இருக்கட்டும்!” என்று பதில் சொல்லி புத்தன் மௌனமாகிவிட்டார்.

தோழி சொன்ன செய்தியைக் கேட்டு ஆமிரபாலி மெய்சிலிர்த்தாள்.

“என் பிரபு வருகிறானா என்னைக் காண!” என்று எண்ணி எண்ணி வியந்தாள்.

“எப்பொழுது, எப்படி வருவாரோ?” என்று யோசித்துக்கொண்டே இருந்தாள்.

“ஆமிரபாலி! ஓவிய உருவமா உன்னை இப்படி உருக்குகிறது? நான் இருக்கிறேனே அதைச் சித்தரித்தவன்?” என்று காதலன் கெஞ்சினான்.

“உன்னைக் காட்டிலும் அந்த ஓவியம் பெரிது. அதைக் காட்டிலும் பெரிது அந்த மூலமூர்த்தி!” என்றுதான் அவள் சொன்னாள்.

தானே வீடெல்லாம் கழுவி விளக்கேற்றி வைத்தாள்; அவள் மனதையும் கழுவிவிட்டாள் அத்துடன்! அதில் விளக்கு மட்டும் ஏற்றி வைக்க அவர் வரவை எதிர்பார்த்தாள்.

தன் மனையிலும் மனத்திலும் பழைய மாசு கொஞ்சம்கூட, இல்லாமற் போகும்படி நன்றாகத் துலக்கினாள். அவர் வந்து பிக்ஷை பெற அவை யோக்யமாக வேண்டாமா? அவருக்குப் பாத பூஜை செய்ய அவை தகுதியுள்ளனவாக ஆக வேண்டாமா?

பாதி இரவு கழிந்ததுமே அவள் பரபரப்படைந்தாள். விடிய வேண்டுமென்று அவளால் காத்திருக்க முடியவில்லை. அப்பொழுதே எழுந்து சென்று தன் ஆடை அலங்காரங்களை முன்செய்த தீவினைத் தொடர்புகளைப் போல - கடைசி முறையாகக் களைந்தெறிந்தாள். சுத்த ஜலத்தில், அறிவில் முழுகுவதுபோல, முழுகித் தூய ஆடை உடுத்துக்கொண்டாள். உதயதாரகையின் தெளிவுடனும் தூய்மையுடனும் மாடியில் நின்றுகொண்டு அவரை எதிர்பார்த்தாள். அவர் எப்பொழுது வருவாரோ? வரும் பொழுது தயாராய் இல்லாமல்

ஏமாந்துபோகக்கூடாதே!

புத்தன்கூட அன்றிரவு தூங்கவில்லை. ஆமிரபாலியின் அழைப்பு அவருக்கு ஓர் அபூர்வ திருப்தியைக் கொடுத்ததுமின்றி அவர் உள்ளத்தையும் கிளறிவிட்டது. அவளைக்கூட - இளமையும் அழகும் ஐசுவரியமும் நிறைந்த தாசியைக்கூட - ஆழத்தொட்டு எழுப்பிவிட்டது எது என்று ஆலோசனை செய்தார். அது தனது மூர்த்தியல்ல - நிச்சயம் - தனது சித்தாந்தம்தான். தனது மூர்த்தி அதனால் ஏற்பட்ட ஒரு ஜ்வாலை, அவ்வளவுதான். சித்தாந்தம்தான் உண்மையான காரணம் - அக்னி. அவளுடைய பக்தி - அவள் அவரிடம் காட்டிய பிரேமை - சித்தாந்தத்தின் பிரதிபலிப்பு. அதற்கு அவர் கண்ணாடி— இந்தமாதிரி அவர் எண்ணங்கள் ஓடின.

அப்பொழுது உலகமே தன்னை மறந்து உறக்கத்தில் நிலைதப்பி இருந்தது. அருணோதயத்துக்கு முந்தின மங்கல் வேளை. புத்தன் தன் ஆசனத்திலிருந்து எழுந்து தனியாக வெளியேறினார். தோப்பை விட்டு, தனியாகப் போனார், அந்த மௌனத்திலிருந்து கிளம்பின காலைக்குரல் போல. தனியாக வைசாலி நகரத்தில் நுழைந்தார். இருள் கொஞ்சம் கொஞ்சமாக நீங்கிக்கொண்டிருந்த ராஜ வீதியில் ஒளி உருவமாக நடந்து சென்றார். அதை நகரம் அறியவில்லை. நகரம் தூங்கிக்கொண்டிருந்தது.

நட்சத்திரங்களற்ற காலைச் சந்திரன் போல புத்தன் தனியாக நடந்து வந்ததை ஆமிரபாலி மாடியிலிருந்து பார்த்துவிட்டாள். தன் உள்ளத்தில் கோவில் கொண்டுவிட்ட உருவம் தன்னைத் தேடி வருவதைக் கண்ட அவள் தன்னை மறந்தாள்.

புத்தன் வீதியின் இரு பக்கங்களையும் நிதானமாகப் பார்த்துக்கொண்டே வந்தார். எங்கும் யாரும் இல்லை. அந்த நேரத்தில் யார் விழிப்பார்கள்? ஆனால் அவருக்குத் தெரியும், ஆமிரபாலி தன்னை எதிர்பார்த்துக்கொண்டு காத்திருப்பாள் என்று. தன் கண்களில் அப்பொழுது பட்ட பெண் வடிவு அவள்தான் என்று அறிந்தார். நடுத்தெருவில் நின்றுவிட்டார்.

ஆமிரபாலி கீழே இறங்கி ஓடிவந்து அவர் காலடிகளில் விழுந்து கால்களைப் பிடித்துக்கொண்டாள். அவளுடைய நீண்ட கேசம் அவர் பாதங்களைத் துடைத்தது.

கருணை பொங்கிய பார்வையுடன் அவளைக் குனிந்து பார்த்து பகவான் அவளைத் தன் கைகள் கொண்டு தூக்கினார்.

“குழந்தாய், உனக்கு மங்களம் உண்டாகும்!” என்றார் மெதுவாக.

“பிரபோ! பாதப் பிரஸாதம் வேண்டும்!” என்றாள் ஆமிரபாலி.

“அம்மா, கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போ, வழிகாட்டு - பக்தியும் சிரத்தையும் குடிகொண்ட உன் அன்பு மாளிகைக்குப் போவோம்!” என்றார் பிரபு.

“நான் அளிக்கும் பாத பூஜையை ஏற்க...” என்று தடுமாறினாள் அவள்.

“பிக்ஷையிடு!” என்று பதில் வந்தது பிரபுவிடமிருந்து.

- பாரததேவி, 30.07.1939

# 4. விபரீதக் காதல்

அசோகனிடமிருந்து அந்த வரத்தைப் பெற்றதுமே அவளுடைய அயர்வெல்லாம் எங்கோ போய்விட்டது. அரசனுடைய வியாதிக் காலத்தில் அவருக்கு இடைவிடாமல், இராப்பகலின்றி பணி செய்ததால் அவள் உடம்பு மிகவும் துர்ப்பலமாகிவிட்டது. அந்த சுச்ரூஷையால் வியாதி நீங்கி உடல் நலம் பெற்ற அரசன் திஷ்யரக்ஷையை வேண்டியதைக் கேட்கச் சொன்னார்.

"நான் ஒரு வருஷம் ராஜ்யபாரம் செய்ய வேண்டும்!" என்று அவள் கேட்டாள்.

அரசன் உடனே "சரி" என்றான்.

அரசாட்சி அதிகாரம் கைக்கு வந்ததும் திஷ்யரக்ஷை முன்போல ஆகிவிட்டாள். அதற்குத்தானே அவள் அவ்வளவு பாடுபட்டது? அது கிடைத்தவுடன் தான் தன் மனோரதத்தை எப்படியாவது நிறைவேற்றிக்கொள்ளலாம் என்று திடம் கொண்டிருந்தாள் அவள்.

அதற்கு முன் குணாளனுடைய உள்ளத்தைக் கவர என்னவெல்லாமோதான் செய்து பார்த்தாள். முடியவில்லை. ஆனால், அவள் தளரவில்லை. அவள் தன் உள்ளத்தை அவ்வளவு வேகத்துடன் குணாளனுக்குப் பறிகொடுத்துவிட்டது அவளுக்கே ஒரு சமயத்தில் திகைப்பாகவும், ஒரு சமயத்தில் ஏக்கமாகவும், ஆனால் சதா சர்வகாலமும் உயிர் ஊக்கமுமாகவும் இருந்தது.

அவள் தன் உள்ளத்தில் பொங்கிய அந்த விபரீதமான காதலுக்கு அணை போட முயலவில்லை. தன்னுடைய கணவன் அசோகனுடைய மகன் குணாளன் என்ற நினைப்பே அவளுக்கு உதிக்கவில்லை. அவளுடைய உள்ளம், முதல் முதலாக அவள் வாழ்க்கையில் குணாளனைக் கண்டதும், கொண்ட விரிவை அதற்குமுன் அவள் அறியாததால், அறிந்து பரிச்சயம் பெறாததால், அவளை அடிமையாக்கிவிட்டது. அந்த அபூர்வ உணர்ச்சிக்குத் திருப்தி அளிக்க எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்று ஓர் அசாதாரணமான துணிச்சலைக் கொண்டாள். அந்தப் பெண்ணுள்ளக் கிளர்ச்சிக்கு இடம் கொடுத்த பொழுது தான் ஒரு பெண் என்பதையே மறந்தாள். இல்லாவிட்டால் அப்படி மட்டற்ற முறையில் தன் கட்டழகை அவன் காலடியில் வீழ்த்திக் கெஞ்சுவாளா சாதாரணமாக? அவன் அதை உதைத்தெறிந்துவிட்டுப் போன பிறகும் அவன் மனதை மாற்ற முடியும் என்று பேராசை கொள்ளுவாளா?

ஆதி முதலே அவள் வாழ்க்கை ஒரு விபரீதம்; நாவிதப் பெண்ணாக எங்கோ இருந்தவள் அசோக சக்கரவர்த்தியின் மனைவியானாள். அரசன் மனைவியாக வேண்டும் என்ற விபரீத எண்ணம் அவளை ஆட்கொண்டு ஆட்டிய வேகத்தில், தன் சக்தி முழுமையும் பிரயோகம் செய்து அரசன் மனதைக் கவர்ந்து அவன் மனைவியானாள்.

அதன் பிறகு குணாளன், அவள் கண்ணில் பட்டான். அவனுடைய உருவம், முக்கியமாக அவனுடைய கண்களிலிருந்த ஏதோ ஓர் ஒளி, அவளை மறுபடியும் மற்றொரு விபரீதத்தில் ஆழ்த்திற்று. அதிலும் வெற்றி பெற்றுவிடுவோம் என்று அவள் இயற்கை முழு வேகத்துடன் மூண்டு எழுந்தது. ஆனால், குணாளனுடைய திடத்தின் முன் அதன் பலம் சாயவில்லை.

குணாளன் ஏன் தன்னைப் புறக்கணித்தான் என்று அவளுக்குத் தெரியவில்லை. தான் அவனுக்குத் தாய் முறை என்றதால்தான் இருக்குமோ என்ற சந்தேகம் ஒருகணம் கூட அவள் மனதில் பதியவில்லை. அந்தப் பெரும் தடங்கல் ஒன்று தனக்கும் அவனுக்கும் நடுவில் இருப்பதாகவே, அவளுக்குப் படவில்லை. குணாளன் ஓரிரண்டு தடவை அதை லேசாகச் சூசனை செய்து சொன்னபோதும் கூட அவள் அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. அது பொய் என்பது அவள் உள்ளத்தின் துணிவு. அது நிஜமானால் தன் மனம் ஏன் அப்படி அந்த அத்துக்கு மீறி நின்றது என்று அவள் வாதாடி இருக்கவேண்டும் தனக்குள். தன் இயற்கையில்தான் அவளுக்கு நம்பிக்கை. அதைப்போலத்தான் புற இயற்கைகளும் இருக்கவேண்டும் என்று தீர்மானித்தாள்.

பின் ஏன் குணாளன் அவளைப் புறக்கணித்தான்? தன் யௌவனமும் வனப்பும் அவனுக்கு ஒரு சோதனைதான் என்பதைப்பற்றி அவள் சந்தேகிக்கவில்லை. அவளுக்கு அந்தத் துணிவு இல்லாவிட்டால் ஏன் செய்யாத முயற்சிகள் எல்லாம் செய்கிறாள்? எல்லாத் தடங்கல்களையும் ஒரு சிறு குழி போலக் கருதித் தாண்டிக்கொண்டு அவன் தன்னிடம் வரவேண்டியவன் என்று எண்ணினாள்.

பின் ஏன் வரவில்லை? தன் பத்தினி காஞ்சனமாலையின் மெல்லிய அழகில் அவன் கட்டுண்டு கிடந்திருக்க முடியாது. சக்கை போன்ற ஓர் ஒழுக்கத்தில் அவனுடைய யௌவனம் வெகுகாலம் குன்றிக் கிடக்க முடியாது - நிச்சயம். காஞ்சனமாலை பௌத்த மதத்தைச் சேர்ந்தவள். குணாளனும் பௌத்த மதத்தில் மெய்மறந்து லயித்துவிட்டான். தானும் அதில் சேர்ந்தால்?

அந்த எண்ணம் உதித்ததுமே திஷ்யரக்ஷை தானும் பௌத்த தர்மத்தைத் தழுவினாள். நிரந்தரமாகத் தன் பேரவாவைத் தீர்த்துக்கொள்ளச் சிறிது தன் அகங்காரத்தையே மறந்து பௌத்த மத சேவை செய்தாள் - அவ்விதமாகவாவது அவன் பிரியத்தைச் சம்பாதிக்கலாமென்று. அதிலும் தன் முயற்சி பலன் பெறாமல் போனதால்தான், பெண் நாகம் போலச் சீறி எழுந்து பெருத்த சூழ்ச்சியில் இறங்கினாள் அவள்.

அரசாட்சி அதிகாரத்தை அரசனிடமிருந்து பெற்று குணாளனுக்கு மேல் உயர்ந்து நின்றுகொண்டு அவனைக் கூப்பிட்டாள்.

"நான் சர்வாதிகாரிணி, எல்லாம் உன்னுடையது, வா!" என்று அழைத்தாள். பெண்ணின் பேரெழில், பொங்கும் காதல், ராஜ்யபதவி எல்லாம் ஒருங்கே திரண்டு வந்து காலைப் பிடித்துக்கொண்ட பொழுதும் அதைக் குணாளன் உதறித் தள்ளின பொழுதுகூட அவளுக்குப் புத்தி வரவில்லை. அவள் பிடிவாதம் போகவில்லை.

அவனுடைய ஒளிக் கண்களைக் கவராத தன் எழிலையும் காதலையும் அப்பொழுது அவள் வெறுத்தாள். அவை உபயோகமில்லை என்று தூரத் தள்ளித் தன் அதிகாரத்தை மட்டும் கைக்கொண்டு தன் பிடிவாதத்தைச் செலுத்தலானாள்.

'கண்களில் விரலை விட்டு ஆட்டுவது என்பார்கள் உலகத்தில். அவன் கண்கள் என் உயிரில் ஒளியிட்டு ஆட்டுகின்றன. அந்தக் கண்களில் நான் கவர்ந்து கொள்ளுகிறேன்!' என்ற கொடிய தீர்மானத்துக்கு வந்தாள். - அரசி என்ற முறையில் திஷ்யரக்ஷையின் உத்தரவுக்கு உட்பட்டு சேனாதிபதி பதவியேற்று, தக்ஷசீலத்தில் நடந்த கலகம் ஒன்றை அடக்குவதற்காகக் குணாளன் அங்கே போயிருந்தான். பௌத்தர்களுக்கும், ஹிந்துக்களுக்கும் நேர்ந்த அந்தக் கலகத்தில் குணாளன் ஹிந்துக்களை ஒடுக்கி பௌத்த மதத்தை நிலைநிறுத்தினான்.

அப்போது ராஜதானியாகிய பாடலிபுரத்திலிருந்து திஷ்யரக்ஷையின் உத்தரவு ஒன்று வந்தது. அதன்படி குணாளன் சிறை செய்யப்பட்டான். சேனை பலமாக ஆட்சேபித்தும் அரசியின் உத்தரவிற்குக் குணாளன் கீழ்ப்படிந்துவிட்டான். உடனே மற்றோர் உத்தரவும் வந்தது. அதன்படி குணாளனின் கண்கள் பிடுங்கப்பட்டுவிட்டன. அதற்கும் அவன் மறுமொழி சொல்லாமல் சம்மதித்தான். இவைகளில் ஒன்றுமே அசோகனுக்குத் தெரியாது.

அன்று, எப்பொழுதும் போல இல்லாமல், திஷ்யரக்ஷை விபரீதமாக அலங்காரம் செய்துகொண்டது தாதிகளுக்கும் ஆச்சரியமாக இருந்தது. காதலனை வரவேற்கப்போகும் காதலி போல ஆவலுடன் திஷ்யரக்ஷை

புன்முறுவல் கொண்டு அங்குமிங்கும் போய்க்கொண்டிருந்தாள்.

'அப்ப! இவ்வளவு பிரயாசையா ஒரு பெண் உள்ளத்தின் ஆசை தணிவதற்கு? ஒரு ராஜ்யமே இதற்காகச் சிதைந்து போய்விட்டதே!... பொங்கும் என் உள்ளம் இன்று தணியும்!' என்று திஷ்யரக்ஷை தனக்குள் சொல்லிக்கொண்டாள் மெதுவாக.

பெண் புலி போல இவ்வளவு நாட்கள் அட்டகாசம் செய்தவள் அன்று மான் போலத் துள்ளி விளையாடினாள். தாதிகளுடன் கொஞ்சிக் குலாவினாள். பெண் அடக்கத்துடனும் வெட்கத்துடனும் அடிக்கடி தன்னையே கண்ணாடியில் பார்த்துக்கொண்டாள்.

அப்பொழுது தக்ஷசீலத்திலிருந்து யாரோ வந்திருப்பதாக ஆள் வந்து சொன்னான். உள்ளத் துடிப்புடன் உடனே அவனை உள்ளே வரும்படி உத்தரவிட்டாள் திஷ்யரக்ஷை. திடீரென்று ஏதோ நினைத்துக்கொண்டு தாதிகளை எல்லாம் வெளியே போகச் சொன்னாள்.

ஆள் உள்ளே வந்து அரசிக்கு வணங்கிவிட்டு ஒரு சிறிய பெட்டகத்தை அவள் முன் வைத்தான்.

"சரி, நீ போகலாம்!" என்று அவனை வெளியே அனுப்பினாள்.

ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து பெட்டியை எடுத்து ஆவலுடன் திறந்து அப்படியே மார்பில் அணைத்துக்கொண்டாள். அவள் அதுவரையில் அறியாத ஓர் இன்பம் அவளை நடுநடுங்கச் செய்தது. மூடிய கண்களுடன் சிறிய நேரம் மெய்மறந்து நின்றாள்.

பிறகு மார்பிலிருந்து பெட்டியை எடுத்துக் கண்களில் ஒத்திக்கொள்ளத் தூக்கினாள். ஒரு நிமிஷம் உள்ளே பார்த்தாள். உள்ளே, நீலம் பாய்ந்து ரத்தம் தோய்ந்த இரு விழிகள் இருந்தன. வேறொன்றும் காணோம்!

அவள் உயிரில் ஊடுருவிப் பாய்ந்து அவள் தேகத்தை ஆட்டிவைத்த ஒளி அவற்றில் காணோம்! வெறும் மாமிசத் துண்டுகள் இரண்டு குப்பென்று நாற்றம் வீசின அவளது முகத்தில்.

அலறிக்கொண்டு கீழே விழுந்தாள் திஷ்யரக்ஷை. கண் விழிகள் இரண்டும் கீழே விழுந்து நீராயின!

"என்னை வாட்டிய ஒளி எங்கே?" என்று பிதற்றிய அரசியைத் தாதிகள் தூக்கி அசுவாஸப்படுத்த முயன்றார்கள்.

- 1943

# 5. ராஜ பிக்ஷுணி

பிக்ஷுணி உடைகளைத் தரித்துக்கொண்டு, சிறையிலிருந்து தப்பித்து வெளியேறிய ராஜ்யஸ்ரீ விந்திய மலைச்சாரலில் பௌத்த பிக்ஷுணிகளுடைய கூட்டத்தில் சேர்ந்தாள். அவளுடைய இளமை பொங்கிய தளிர் உடலிலும் அந்தக் காவி ஒருவிதமான சோபையுடன்தான் விளங்கிற்று.

ஆனால், ராஜ்யஸ்ரீ தன்னுடைய துக்கத்தை மறக்க முடியவில்லை. மிதமிஞ்சிய சுகத்தின் நடுவில், முன் எச்சரிக்கை கூட இல்லாமல் வந்த மிதமிஞ்சிய துக்கத்தை அந்த சாத்விகளின் சத்சங்கத்தில் கூட அவளால் உதறித்தள்ள முடியவில்லை. அவளுடைய உடையை மாற்ற முடிந்தது சுலபமாக; அவள் மனது மட்டும் அவ்வளவு லேசாக மாறவில்லை.

அந்த மலைச்சாரலில், மெல்லிய காற்றிலும் மிருதுவான அருவி நீரிலும் அமைதி நிலவிய இடத்தில் ராஜ்யஸ்ரீக்கு இருப்புக்கொள்ளவில்லை. அவள் கண்களில் பட்டு அவற்றை நிறைவித்த அந்த வெளியுலகத்து வேனிற்காட்சி அவளுடைய உள்ளத்தில் வேதனையை இன்னும் கொஞ்சம் கிளறிவிடுவது போல் இருந்தது. அவளுடைய உடைக்கேற்ற காவித்தெளிவும் தேர்ச்சியும் அவளுடைய ஹிருதயத்திலும் முகத்திலும் ஏற்படவில்லை. கலக்கமும் ஏக்கமும்தான் மூண்டு மூண்டு எழுந்தன.

பிக்ஷுணிகளை விட்டுப் பிரிந்து போய்விடலாமென்று ஒருசமயம் எண்ணினாள். ‘ஆனால், அப்பொழுது மட்டும்? நிழல் கூடக்கூடத்தானே வரும்?’ என்று தனக்குள்ளேயே பதில் சொல்லிக்கொண்டாள். கடைசியாக, பல நாட்களுக்குப் பிறகு தாங்கமுடியாத அந்த வேதனையை ஒருவிதமாக ஒழித்துவிடுவதென்று தீர்மானித்தாள். தீயில் இறங்கி உயிரை விட்டுவிடுவதென்று நிச்சயித்து பிக்ஷுணிகளை சிதை தயார் செய்யச் சொன்னாள், யார் என்ன சொல்லியும் அவள் கேட்கவில்லை. அவள் வேதனையை யார் அறிவார்கள்?

சிதைக்கு முன் நின்றுகொண்டு சிறிது நேரம் தனது வாழ்க்கையைப் பற்றி நினைத்துப் பார்த்தாள். அந்த மலைச்சாரலில் மேடு பள்ளத்தில் நின்றவண்ணம், காலை வெய்யிலில் புதுக்காஷாயம் பொன்போல் மின்ன, ராஜ்யஸ்ரீ தன்னையே மறந்தாள். சிதையில் தீ பற்றிக்கொண்டு ஜ்வாலை உயர்ந்து எரிந்தது. அதன் பக்கத்தில் அவள் மற்றொரு ஜ்வாலை போல நின்றாள். ஓர் அபூர்வமான திருப்தி அப்பொழுது அவள் முகத்தில் தென்பட்டது. அவள் கண்களில் நிறைந்த கண்ணீர் வெய்யில்பட்டு மின்னியது. பிக்ஷுணிகள் கலங்கி ஒருபக்கம்

நின்றார்கள்.

ராஜ்யஸ்ரீ தலைதூக்கி விந்திய பர்வதச் சிகரங்களைப் பார்த்தாள். பாதி மலையில் கவிந்திருந்த மேகங்களுக்கு மேல் சூரிய வெளிச்சம் பளிச்சென்று மலையில் அடித்துக்கொண்டிருந்தது? வாழ்க்கைக்கு மேல் அப்படி ஒரு வெளிச்சம் இருக்குமோ?...

வெளிச்சமா? இனி ஏது வெளிச்சம் - வாழ்க்கையிலோ, வேறெங்கோ? முன்பின் தெரியாத ஒரே இருள்தான் - அவளுக்கு!

***

சில தினங்களுக்கு முன்தான் ராஜ்யஸ்ரீ சுக சிகரத்தில் இருந்தாள். அரசன் கிருகவர்மன் ஓர் இளம் காதலனின் நித்திய வேட்கையிலேயே இருந்துகொண்டு, அவள் காதுகளில் ஈரச்சொற்களை இரகசியமாக நிரப்பி, இடைவிடாது ஏகாந்தத்தில் அவளைப் புல்லரிக்கச் செய்தான். சதா கண்மூடி மௌனமாகும் காதல் நிலையை அளித்தான். கன்னோசியின் அரண்மனை மாடியில், பூர்ணசந்திரனின் பார்வையின்கீழ், அவளை அமர நிலையில் இருத்தி, அவள் பக்கத்திலிருந்து அழகு சேவை புரிந்தான். நிலவில் குழைத்துக் கலங்கிய ஓர் இன்பரஸம் அவளை மதுபோல மயக்கிச் சுகபோதை கொடுத்தது. கிருகவர்மன் தனக்கென்று அவன் கையால் கற்பித்த அந்தக் கனவுலகம் கலையவே கலையாது என்ற நினைப்பில் பரிபூர்ணமாக அதில் ஈடுபட்டாள் ராஜ்யஸ்ரீ.

உயர்ந்து ஒடிந்து விழுவது போலிருந்த அவள் உடலில் யௌவனத்தில் எழில் எதிர்த்து நின்றது. நாட்டிலேயே அவள்தான் வனப்பும் வித்தையும் நிறைந்த யுவதி. பிரபாகர வர்த்தனன் தன் செல்வப் பெண்ணை அடைய கிருகவர்மன் ஒருவன்தான் தகுதியுள்ளவன் என்று அவனுக்கு மணம் செய்வித்துக் கொடுத்தான் அவளை. கிருகவர்மன் ஒரு கந்தர்வன் போன்றவன். ஓரிடத்தில் சேர்ந்திருக்காத லட்சுமியும் சரஸ்வதியும் அவனிடம் சேர்ந்து வசித்ததாகக் கவிகள் வர்ணித்தார்கள். ராஜ்யஸ்ரீயே அவ்விருவர்களுடைய பிரதி உருவம்தானே!

கன்னோசியில் கிருகவர்மனும் ராஜ்யஸ்ரீயும், வீரமும் அழகும் ஒன்றுபட்டது போல வாழ்வதைக் கண்டு மாளவதேசத்து அரசன் தேவகுப்தனுக்குப் பொறுக்கவில்லை. கன்னோசியின் மேலேயே அவன் கண்ணாக இருந்தான். திடீரென்று பிரபாகர வர்த்தனன் இறந்தார். அவருடைய மூத்த மகன் ராஜ்யவர்த்தனன் ஹூணர்களை எதிர்த்துப் போராடச் சென்றிருந்தான். ஹர்ஷவர்த்தனன் மட்டும்தான் தனேசுவரத்தில் இருந்தான். அந்த சமயம் பார்த்துத் திடீரென்று -

கிருகவர்மன் எதிர்பாராத முறையில் - கன்னோசிமேல் படையெடுத்து வந்தான் தேவகுப்தன்.

காதலர்களின் கனவு திடீரென்று கலைந்தது. கிருகவர்மன் ராஜ்யஸ்ரீயின் பக்கத்திலிருந்து பிரிந்து வெளியேறி, எதிரியைத் தாக்கப் போனான். ஆனால், எதிர்பாராத எதிரியை எப்படி சமாளிக்க முடியும்? அதற்காக கிருகவர்மன் மனது சளைக்கவில்லை. அவன் உயர்தர ரசிகன் மட்டுமல்ல; சுத்த வீரனும்கூட. ஆகையால், ஆவேசம் கொண்டு எதிரி மேல் விழுந்து போர் செய்தான். போர்க்களத்தில் எதிரியின் வாளுக்கு இரையானான்.

கனவு சிதைந்த துக்கம் ஒருபுறம்; காதலனைப் பிரிந்த துக்கம் ஒருபுறம்; ராஜ்யஸ்ரீ செடியிலிருந்து பறித்தெரியப்பட்ட புஷ்பம்போல் வாழ்க்கையின் வெய்யிலில் துடித்து வாடினாள். கன்னோசியிலிருந்து வெளியேறிக் காட்டு வழியாகச் சென்று பிக்ஷுணிகளைச் சேர்ந்தாள்.

'ஏகாக்ரமான காதலுக்கும் இன்பத்திற்கும் வாழ்க்கையில் இடம் இல்லையோ? ஏகாக்ரமாக துஷ்யந்தனைப் பற்றி எண்ணிக்கொண்டிருந்து உலகத்தையே மறந்ததால்தான் சகுந்தலைக்கு துர்வாஸரின் சாபம் கிடைத்தது; பின் துக்கங்கள் எல்லாம் ஏற்பட்டன. பின்னே ஏன் சேற்றிலிருந்து தாமரை கிளம்புவது போல், வாழ்க்கையிலிருந்து, காதல் கிளம்புகிறது? வாழ்க்கையின் லட்சியம் காதல் ஒன்றுதானா? இல்லை. காதலை வாழ்க்கையின் லட்சியமாக வைத்தால்தான் சிதைவு ஏற்படுகிறது. காதல் வெறும் தன்னலம்தான் என்பதாலா?'

***

ராஜ்யஸ்ரீ இவ்வாறு என்னென்னவோ யோசித்துக் கொண்டு நின்றிருந்தாள். சிதையிலிருந்து அக்னியின் நாக்குகள் சிவப்புப் பாம்புகள் போலக் கிளம்பின. ராஜ்யஸ்ரீயை அவை அழைப்பதுபோல் இருந்தது. 'இதோ வருகிறேன், கருணைக்கனலே!' என்று தீயை நெருங்கினாள். உணர்ச்சியை வென்ற பிக்ஷுணிகள் கூட அலறினார்கள்.

அந்தச் சமயம் காட்டின் பாதையில் குதிரைகள் ஓடிவரும் சத்தம் கேட்டது. திடீரென்று ஒரு கூட்டமாய்ப் போர் வீரர்கள் தோன்றினார்கள். அவர்கள் தலைமையில் ஹர்ஷவர்த்தனன் வந்தான்.

சிதையையும் பெண்களையும் பார்த்துப் பிரமித்தான்; பிறகு தன் தங்கையையே பார்த்தான்.

“ராஜ்யஸ்ரீ!” என்று கத்திவிட்டான் ஹர்ஷன்.

“இல்லை, அண்ணா, ஸ்ரீயல்ல!” என்று ராஜ்யஸ்ரீ உற்சாகமற்ற குரலில் பதில் சொன்னாள்.

“என்ன? என்னைக் கண்டு நீ சந்தோஷமடையவில்லையா?” என்று ஹர்ஷன் ஆச்சரியத்துடன் கேட்டான்.

“எதைக் கண்டும் சந்தோஷப்படும் சக்தி என்னிடம் இப்பொழுது இல்லை”

“ராஜ்யஸ்ரீயா, நீயா இப்படிப் பேசுகிறாய்?”

“ராஜ்யஸ்ரீ அல்ல, ராஜ்யஸ்ரீ போய்விட்டாள். நான் பிக்ஷுணி.”

“என்ன? பிக்ஷுணியா?”

“ஆமாம்!”

“நீ பிக்ஷுணியாய்விட்டால், ராஜ்யவர்த்தனனும் நானும் என்ன செய்வது?”

“ஏன்? நான் என்ன செய்யப்போகிறேன்?”

“ராஜ்ய காரியங்களில் உதவிபுரிய வேண்டுமே! நாட்டை அன்னியர் கைப்பற்றிக்கொள்ளாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமே!”

“ஹர்ஷ! என்னை மன்னித்துவிடு; நான் இனிமேல் வாழ்க்கையில் சிரத்தை கொள்ளமுடியாது!”

“கிருகவர்மன் இறந்தது சகிக்கமுடியாத துக்கம்தான். ஆனால் புருஷன் மட்டுமல்ல, உனக்கு உடன்பிறந்தவர்களும் இருக்கிறார்கள். அவர்களுக்கும் நீ செய்யவேண்டிய கடமைகள் இருக்கின்றன.”

“என் மகத்தான துக்க நெருப்பில் எல்லாக் கடமைகளும் எரிந்துபோய்விட்டன.”

“ராஜ்யஸ்ரீ! துக்கப்பெருக்கில் நீ அந்த மாதிரி நினைக்கிறாய். ஆனால், சுகத்தையும் துக்கத்தையும் தனித்துத் தனித்துப் பாராட்ட வாழ்க்கையில் மனிதனுக்கு உரிமை கிடையாது- மனிதனின் உயர்ந்த தர்மத்தை கவனித்தால். நீ கடைப்பிடித்திருக்கும் பௌத்த நியதியின்படிகூட பரோபகாரமும் அஹிம்ஸையும்தான் வாழ்க்கையின் கடமைகள், சுகதுக்கங்களைப் பெரிதுபடுத்திப் பாராட்ட நமக்கு அதிகாரம் கிடையாது. புத்த பகவான்-”

“ஹர்ஷ! ஹர்ஷ! நீ ஏன் இப்படி இப்பொழுது இங்கே வந்து என்

தீர்மானத்தைக் கலைக்கிறாய்? - இல்லை, இல்லை! மாட்டேன்! என்னால் பொறுக்க முடியவில்லை. மறக்க முடியவில்லை. நான் பாபிதான், ஒத்துக்கொள்கிறேன். முடியாது - நான் சாகத்தான் வேண்டும் - வேறு வழியில்லை. ஹர்ஷ! நீ போய் வெற்றியுடன் வாழ்க்கையைக் கடைப்பிடி! நான் தோல்வியில் மடிகிறேன். என்னை இங்கே விட்டுச்செல், தைரியமாக! உன் கருணையால், சகோதர வாஞ்சையால், என்னைக் காலாந்தரத்திற்கும் நிம்மதியற்ற ஜீவனாகச் செய்யப்பார்க்காதே? அண்ணா உனக்குப் புண்ணியம் உண்டு. தயை செய், போ. அதுதான் நீ எனக்குச் செய்யக்கூடிய சகோதர உதவி!”

“ராஜ்யஸ்ரீ, நீ எல்லாம் அறிந்தவள். ஆனால், துக்கம் உன்மனதில் புகைபோலச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. உணர்ச்சி யாரை விட்டது? ஆகையால், நீ உன்னையே மறப்பது ஆச்சரியமல்ல. உனக்கு நினைப்பு மூட்டுவது என் கடமை. நீ உனக்காக மட்டுமா வாழவேண்டும்? அதுதானா உன் ஜீவிய லட்சியம்?”

“என்ன சொல்லுகிறாய் ஹர்ஷ?” என்று சொல்லிக்கொண்டு ராஜ்யஸ்ரீ பீதியும் கலக்கமும் கொண்டு பின்வாங்கினாள்.

“ராஜ்ய பாரத்தில் நீயும் கொஞ்சம் உதவி செய்யவேண்டும். அது நமது தந்தையின் நோக்கம். உனது சபதமும் கூட, நினைவிருக்கிறதா?”

“என் உயிரே போன பிறகு நான் எப்படி?” என்றாள்.

“புத்தன் யசோதரையைப் பறிகொடுத்தது?” என்று ஹர்ஷன் உணர்ச்சியுடன் கூறினான்.

ராஜ்யஸ்ரீ உலுக்கி விழுந்தாள். சட்டென்று கண்களை மூடிக்கொண்டு போதி சத்துவ ஸ்வரூபத்தை மனதில் நினைத்துக்கொண்டாள்.

“ஹர்ஷ! உன்னுடன் வருகிறேன். வா, போவோம்!” என்று வெறி பிடித்தவள் போலக் கூறினாள் ராஜ்யஸ்ரீ.

- 1943

# 6. குந்தவையின் கைதி

“குந்தவையே, விமலாதித்தியனை இன்னும் சிறையிட்டு வைத்துக்கொண்டிருப்பதில் உனக்கென்ன அவ்வளவு திருப்தி? அவனைச் சிறைப்படுத்திப் பல வருஷங்கள் ஆகிவிட்டன. இனிமேல் அவனால் ஒன்றும் செய்யமுடியாது. வேங்கி நாடே அவனை இனிமேல் அங்கீகரிக்காது, நிச்சயம். நமது ஆட்சியின்கீழ் அங்கு அரசு செலுத்தும் சக்திவர்மனை அந்த ஜனங்கள் அவ்வளவு பிரியத்துடன் ஆதரிக்கிறார்கள். மேலும் குந்தவையே! எனக்கு என்றுமே விமலாதித்தியனிடம் ஒரு பற்று உண்டு. போரில் அவன் எதிர்த்து வந்த அன்று ஏற்பட்டது அது!”

“ராஜேந்திரா! உனக்கு, விமலாதித்தியனிடம் பற்றா! ஆச்சரியமாகவன்றோ இருக்கிறது. இத்தனை நாள் நீ அதை என்னிடம் சொன்னதே இல்லையே!”

“உன்னிடம் நான் அதை சொல்லவில்லைதான். ஆனால், அது இன்று ஏற்பட்டதன்று. விமலாதித்தியனின் வீரத்தில் எனக்கிருக்கும் மதிப்பு, இன்று நேற்றையதன்று. என்னுடைய தலைமையின் கீழிருந்த பெருத்த சோழ சைனியத்தை ஒரு சில ஆயிர ஆட்களுடன் எதிர்த்து வந்தவன் அன்றோ அவன்? அவன் தன் உயிரைத் துரும்பாக மதித்ததால்தானே அவ்வாறு என் முன் போர்முனையில் தோன்றினான்? அவன் தோற்றானெனில் அது அவன் சோர்வினாலன்று. நமது பெரும்படை அவனுடைய படையை முறியடித்தது. அவ்வளவுதான். அவனது நிலைமையில் எவ்வரசனும் நம்மைப் போன்ற எதிரியை எதிர்த்து வந்திருக்கவே மாட்டான். விமலாதித்தியன் மானத்தைப் பெரிதாகக் கொண்டவன், சுத்த வீரன். தன் நாட்டின் சேவையில் உயிரைத் தியாகம் செய்ய முன்வந்தவன்.”

குந்தவைக்கு ராஜேந்திரன் சொன்னது முழுவதும் ஆச்சரியமாக இருந்தது. அதுவரையில் அவளிடம் விமலாதித்தியனைப்பற்றி ராஜேந்திரன் ஒன்றுமே சொன்னதில்லை. அவளும் கேட்டதில்லை, அவன் சொன்னதைக் கேட்டு மெய்ம்மறந்து போனாள்.

தன் தந்தை ராஜராஜ சோழனின் கைதியென்று மட்டும் அதுவரை அவள் விமலாதித்தியனைப்பற்றித் தெரிந்துவைத்துக்கொண்டிருந்தாள். வேங்கி நாடு சோழ சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாகிவிட்டது என்பதற்கு அடையாளமாக விமலாதித்தியன் ஆயுள் பரியந்தம் கைதியாகவே இருக்கவேண்டுமென்று குந்தவை பிடிவாதம் பிடித்தாள்.

வெற்றியுணர்ச்சியின் பெருக்கில் குந்தவை விமலாதித்தியன் ஒரு மனிதன் என்பதைக்கூட மறந்தாள். தன் நாட்டின் வெற்றிக்கு அவன் ஓர் அடையாளம், உயிர் உணர்வற்ற ஒரு பொருள் என்று எண்ணிவிட்டாள். அவன் எப்படி இருப்பான் என்று பார்ப்பதற்குக்கூட அவளுக்கு என்றும் ஆவல் ஏற்பட்டதில்லை. பெண்ணுக்கு இயற்கையான அந்த எண்ணமே அவள் மனதில் உதிக்கவில்லை. அவள் வெறும் போர்வீர மனப்பான்மையில் பெரிதும் ஈடுபட்டவளாய் தன் பெண்மையையே மறந்திருந்தாள். விமலாதித்தியனை விடுதலை செய்யவேண்டும் என்று ராஜேந்திரன் சொன்னபோதெல்லாம் குந்தவை ஆண்மகனின் கடின சித்தத்துடன் தடுத்து வந்தாள். ராஜேந்திரனே தன் உடன்பிறந்தாளின் இரக்கமின்மையைக் கண்டு கொஞ்சம் வெறுப்பு கொண்டான்.

ராஜேந்திரனும் குந்தவையும் ராஜராஜனுடைய பட்ட மகிஷி தர்மசக்திவிடங்கியின் மக்கள். இருவரும் சேர்ந்து விளையாடினவர்கள்; சேர்ந்து படித்தவர்கள்; கலைகள் கற்றவர்கள், வில்வித்தை முதலான போர் முறைகளில் கூட குந்தவை பயிற்சி பெற்றிருந்தாள்.

ராஜராஜன் மகளை மிகவும் செல்வமாக வளர்த்தான். அவளுடைய இஷ்டத்திற்கு மாறாக ஒன்றுமே நடக்காது. ராஜ காரியங்களில் கூட குந்தவை யோசனைகள் கூறிவந்தாள். ராஜராஜன் தெற்கே படையெடுத்துச் சென்றிருந்தபொழுதும், ராஜேந்திரன் வேங்கிக்குச் சென்றிருந்தபொழுதும் குந்தவைதான் தஞ்சையில் ராஜ்ய பாரத்தை வகித்து நடத்தினாள்.

குந்தவை இருபது வயது அரிவை. சோழ நாட்டின் வளப்பத்திற்கு ஈடு சொல்வதுபோல, அக்காலத்து நாட்டு மகளிரும் காட்டுக் கொடிகள் போலக் கட்டழகு கொண்டவர்கள். அப்பெண்களுக்கு நடுவே குந்தவை தாமரைக் குளத்தில் மொக்குகளிடையே நிற்கும் விரிமலர் போல இருந்தாள். ஆடல் பாடல், சித்திரம் வரைதல், செய்யுள் இயற்றல் முதலிய கலைகளில் முற்றிய தேர்ச்சி பெற்றிருந்தாள். அக்கலை ஞானத்திற்கேற்ப மிருதுத்தன்மையும் புத்திக்கூர்மையும் கொண்டிருந்தாள்; ஆனால் வில்வித்தை, யானையேற்றம், குதிரையேற்றம் முதலியவைகளைக் கற்றதால் வீரமும், தைரியமும் கூடக் கொண்டிருந்தாள்.

ராஜேந்திரனின் பேச்சைக் கேட்டபொழுது முதல் முதலாக குந்தவை, பெண்மை தன்னுள் புலருவதை உணரலானாள். ராஜேந்திரன் அப்பொழுது விமலாதித்தியனைப் பற்றி உரைத்தபொழுது அவள் என்றுமில்லாத ஒரு அதிர்ச்சிக்குள்ளானாள். அன்றுதான் முதன் முதலாக

அவள் ஒரு உயிர் கொண்ட வீரனைப்பற்றிக் கேள்வியுற்றது. தன்னையும் மீறி அப்பெயரைக் கேட்டு பிரமை கொண்டாள். தன்னுள் ஒரு வீர புருஷனின் உருவம் உதிப்பதைக் கண்டு மெய்சிலிர்த்தாள். ஆனால் அதைக் காண பயந்தாள்.

***

வேங்கி நாட்டை விட்டு வந்து வெகுகாலமாக தஞ்சையில் சிறைவாசம் செய்துகொண்டு கிடக்கும் விமலாதித்தியன் உயிரினிடத்திலேயே ஒரு வெறுப்பு கொண்டுவிட்டான். தனது சொந்த நாட்டை மறுபடியும் காணமுடியும் என்ற நம்பிக்கையற்றுப்போய் அவனுக்கு வெகுநாளாகிவிட்டது.

“நான்தான் அதற்குக் காரணம். நீ அநேக தடவை அவரை விடுதலை செய்ய வேண்டுமென்றுதான் சொன்னாய்” என்றாள் குந்தவை ஏக்கம் கொண்ட பார்வையுடன்.

“அவனுக்குச் சிறைக் கட்டுப்பாடு அதிகமில்லை, உண்மை.”

“அதிலென்ன ஆறுதல் இருக்கக்கூடும் அவருக்கு?”

“அரசனுக்கேற்ற மரியாதையெல்லாம் நடக்கிறது.”

“அதிலென்ன ருசி இருக்கப்போகிறது?”

“சொந்த நாட்டைவிட்டு வெளியேறி, தூர தேசத்தில் பிரிவாற்றாமை கொண்டு தவிக்கிறான்.”

“அளகாபுரியிலிருந்து வெளியேற்றப்பட்டு ராமகிரி ஆசிரமத்தில் இருந்துகொண்டு ஏங்கிய யக்ஷனைப்போல” என்று குந்தவை குறுக்கிட்டுக் கூறினாள்.

“தஞ்சை மாளிகைச் சிறையிலிருந்துகொண்டு கோதாவரி நதிக்கரையின் சுதந்திரத்தை நினைத்து நினைத்து உருகி உயிர் விடுகிறான்.”

“அவருக்கு என்ன வயது அண்ணா?” என்று குந்தவை கேட்டாள்.

“விமலாதித்தியனுக்கா? அவனுக்கு வயது முப்பத்தைந்து. பாதி காலத்தைச் சிறையில் கழித்திருக்கிறான்.”

“எப்படி இருப்பார் அண்ணா?”

“சுத்த வீரனுக்குண்டான லக்ஷணங்கள் பொருந்தியவன்-குன்று போன்றவை என்பார்களே, அந்தத் தோள்கள் குன்றிப்போய்விட்டன. பாவம்!... மாலை வேளையில் வடக்கு நோக்கி நின்றுகொண்டு பித்துப் பிடித்தவன் போல தனக்குள்ளேயே பேசுகிறான். பல வருஷங்களின்

தனிமை அவனை ஒடுக்கிவிட்டது. அவன் வீரத்தையே குலைத்துவிட்டது. சில சமயங்களில் திடீரென்று மனமிழந்து பலபலவென்று கண்ணீர் உதிர்க்கிறான். தைரியமிழந்தவன்போலக் கலங்குகிறான்...”

“அவனுடைய சரித்திர வீழ்ச்சியையும் அவனுடைய அஞ்சா நெஞ்சம் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கும் பரிதாபக் காட்சியையும் காண எனக்கு உண்மையில் பிரமை தட்டுகிறது...”

“குந்தவையே! இனிமேல் நீ அவன் விடுதலையைத் தடுப்பது கொடுமையாகும். அவன் இப்பொழுதே நடைப்பிணமாகிவிட்டான். அவன் நினைவு தவறினவன்போல நடமாடுகிறான்” என்று ராஜேந்திரன் குந்தவையைப் பார்க்காமல் பேசிக்கொண்டே இருந்தான்.

பக்கத்தில் விக்கல் சத்தம் கேட்டு திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். குந்தவை உதடுகள் துடிக்க அழுதுகொண்டிருந்தாள்.

“இனிமேல் அவரை வெளியே விட்டாலென்ன, விடாவிட்டால் என்ன? அவரிடம் இனிமேல் என்ன இருக்கப்போகிறது?... என்ன பேடித்தனம் நம்முடையது! என்னை அவமானம் பிடுங்கித் தின்கின்றது. ராஜேந்திரா!”

“அவனைப் பார்த்தால் நீ உண்மையில் உருகிப்போவாய். அப்பேர்ப்பட்ட துயர் உருவாக இருக்கிறான், அம்மா!”

“நான் பார்க்க வேண்டிய அவசியமில்லை. அந்தத் துயர் நிறைந்த தூயமுகம் என்முன் இருக்கிறது.”

“பேடியென்றாய்! உண்மையாகவே நான் இதுவரை பேடியாக இருந்துவிட்டேன். ஒரு விஷயத்தை நான் இதுவரை யாரிடமும் சொல்லாமல், தைரியமற்ற பேடியாக இருந்துவிட்டேன்.”

“அதென்ன விஷயம்?” என்று குந்தவை ஆவலுடன் கேட்டாள்.

“வேங்கி நாட்டுப் போர்க்களத்தில் விமலாதித்தியன் என் உயிரைக் காப்பாற்றினான்!”

குந்தவை தன் பெண் இயற்கையுடன் போராடினாள். அவள் உடல் நடுங்கிற்று.

“போர்க்களத்தில் - விமலாதித்தியன் - உன் உயிரைக் காப்பாற்றினாரா? - ராஜேந்திரா! நீ இப்படியிருப்பாய் என்று நான் எண்ணவில்லை!” அவள் சொன்னது ராஜேந்திரன் காதில் படவில்லை.

“போர் முனையில் வேங்கி நாட்டு வீரன் ஒருவன் என்னிடம் எப்படியோ நெருங்கி வாளால் என்னை வெட்டவிருந்தான். அதை விமலாதித்தியன் கவனித்து, பாய்ந்து வந்து அதைத் தடுத்தான். பிறகுதான் நாம் வெற்றி பெற்றோம்!”

“அப்படியானால் வேங்கி நாடு அவருடையது. அதைத் திருப்பிக் கொடுத்துவிடு, அண்ணா!”

குந்தவை பிறகு ஒன்றும் பேசவில்லை. தள்ளாடிக்கொண்டு நடந்து உள்ளே சென்றாள்.

***

“என்ன குந்தவையே, உன் தாயார் என்னிடம் சொன்னது உண்மையா?” என்று ராஜராஜன் தன் பெண்ணை நோக்கி ஆச்சரியத்துடன் கேட்டார்.

குந்தவை வெட்கத்துடன் தலை குனிந்த வண்ணம் “உண்மைதான், தந்தையே!” என்றாள்.

“ஊரும் பெயருமற்ற விமலாதித்தியனையா நீ உன் கணவனாகத் தேர்ந்தெடுக்கிறாய்?”

“நாம் கவர்ந்துகொண்டதால் அவர் ஊர், அவருடைய மனதை விட்டகலவில்லை. நம்மிடம் நாட்டைப் பறிகொடுத்ததால், அவர் பெயரும் போகவில்லை. அது இப்பொழுது இன்னும் கொஞ்சம் அதிகமாக விளங்குகிறது” என்று சொல்லிவிட்டுச் சட்டென்று, “என் மனதில்” என்று சேர்த்துச் சொன்னாள். பிறகு “அது போதாதா?” என்று நீர் ததும்பிய கண்களுடன் தந்தையின் முகத்தைப் பார்த்துக்கொண்டு கேட்டாள்.

ராஜராஜ சோழன் பிரமித்துப்போனார்.

“விசித்திரமாகவன்றோ இருக்கிறது! நேற்று வரை, அவனை விடுதலைகூடச் செய்யக்கூடாதென்று சொல்லிவந்தாயே, திடீரென்று எப்படி உன் மனதில்-?”

“நேற்று வரை அவர் ஒரு மனிதன் என்ற நினைப்பே என் மனதில் இல்லாமலிருந்தது. இன்று ராஜேந்திரன் என் கண்ணைத் திறந்துவிட்டான். அவர் ஒரு மனிதன் என்று கண்டேன். நானும் ஒரு பெண் என்பதும் நினைவுக்கு வந்துவிட்டது!” என்று கனிந்த குரலில் மெள்ளச் சொன்னாள்.

“நீ அவனை நேரில் பார்த்தாயோ?”

“தேவையே இல்லை. அவர் வேறு திசையில் இருந்தால், அவரைப் பார்க்க வேண்டிய அவசியம் ஒரு வேளை இருக்கலாம். நமது கைதி அவர். பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? அவர் வேங்கி நாட்டரசனாயிருந்தால் பார்க்கலாம். வெற்றி பெற்ற வேந்தனாயிருந்தால் பார்க்கலாம். அவர் இப்பொழுது வீழ்ச்சி மூர்த்தி. அவருக்கு வேறொரு அணியும் தேவையில்லை!”

“சோழ மண்டலாதிபதியின் பெண்ணாகிய நீ என் கைதியையே மணப்பதா?”

“உங்கள் பெண்ணின் கையைப் பிடிப்பவர் உங்கள் கைதி எப்படியாவார்?” என்று குந்தவை கொஞ்சம் புன்னகையுடன் கேட்டாள்.

“பின் உன் கைதியா?” என்று ராஜராஜன் சிரித்துக்கொண்டே கேட்டுவிட்டார்.

“குழந்தாய்! விமலாதித்தியனைச் சிறை கொண்ட அன்றே இந்த எண்ணம் என் மனதில் ஏற்பட்டுவிட்டது. ஆனால், உன்னைப் பலவந்தம் செய்ய எனக்கு இஷ்டமில்லை, இன்று என் மனோரதம் நிறைவேறிவிட்டது. விமலாதித்தியனைப்போன்ற சுத்த வீரனை நான் கண்டதே இல்லை... அவன் மறுபடியும் வேங்கி நாட்டரசனாவான், நீ வேங்கியரசி!...”

“உங்கள் மூலமாகச் சோழர்களுக்கும் சாளுக்கியர்களுக்கும் நட்பும் சம்பந்தமும் ஏற்படட்டும். தென்னாட்டுச் சிற்றரசுகள் ஒன்றுபடட்டும். உங்களுடைய சந்ததிகள் பாரத நாட்டையே ஏகாதிபத்தியமாக்கட்டும்...”

“குந்தவையே, இன்று என் ஜீவியம் பலனடைந்துவிட்டது!”

ராஜராஜசோழனின் கண்களில் நீர் நிறைந்தது. தலைக்கு மேல் வெளியே பறந்த புலிக்கொடியைப் பார்த்துப் பரவசமடைந்தவர் போலக் கைதூக்கி வணங்கினார்.

- 1943.

# 7. காணாமலே காதல்

அம்மங்கா தேவி அன்று என்னவோ அடங்காத மகிழ்ச்சி கொண்டவளாய், அரண்மனைக்குள் ஓரிடத்தில் இருப்புக் கொள்ளாமல் அலைந்துகொண்டிருந்தாள். அத்தை குந்தவையை அன்றுதான் முதல் முதலாகச் சந்தித்தாள். குந்தவை அவளை அன்புடன் அணைத்துக்கொண்டு ஏதேதோ கேட்டதற்கு வெட்கத்துடன் அரை வார்த்தையாகவும் குறை வார்த்தையாகவும் பதில் சொன்னாள். பல கலைகளைப் பயின்றதோடு, யானையேற்றம் குதிரையேற்றம் வில் வித்தை முதலியனவும் கற்றவளுக்கு அத்தையைக் கண்டவுடன் ஒரு சாதாரணப் பெண் போல ஏன் அவ்வளவு வெட்கம் ஏற்படவேண்டும்? அதற்கு முன்னெல்லாம் அரண்மனையில் செல்வச் சிறுமியாக அட்டகாசம் செய்துகொண்டிருந்தவள் அன்று ஏன் அடங்கி ஒடுங்கி அமரிக்கை உருவெடுத்தாற் போல இருந்தாள்?

அத்தான் ராஜராஜன் கண்ணில் அவள் அதுவரையில் படவில்லை. குந்தவை வேடிக்கையாக அவள் கன்னத்தைக் கிள்ளிக்கொண்டு “உன் அத்தானைப் பார்த்தாயோ? எப்படியிருக்கிறான்?” என்று கேட்ட பொழுது அவளை அறியாமல் அவள் மெய்சிலிர்த்தாள். முகம் சிவக்க, மௌனமாகத் தலை குனிந்துகொண்டு நின்றாள்.

அவனுடைய நடையுடை பாவனைகளைத் தன் மனோபாவப்படி கற்பனை செய்து பார்த்துக்கொண்டே இருந்தாள். தன்னைப் பார்த்ததும் தன்னைப்பற்றி அவன் என்ன எண்ணுவான் என்பதையும் எண்ணிப்பார்க்க முயன்றாள். என்றுமில்லாத வழக்கமாக அன்று அம்மங்கா தேவி நிலைக்கண்ணாடியருகில் வெகுநேரம் நின்று தன்னைச் சீர்திருத்திக்கொண்டது தோழிகளுக்குக் கேலி செய்ய இடம் கொடுத்தது.

ராஜேந்திர சோழன் வடக்கே திக்விஜயம் செய்து திரும்பின பிறகு புதிதாக நிர்மாணம் செய்த சோழ நாட்டுத் தலைநகர் கங்கைக்கொண்ட சோழபுரத்தில் [1] அன்று ஒரே கோலாகலம். சோழ தேசத்தையே யாரோ ஒருவர் சம்புடம் போலத் திறந்து அங்கே கொட்டிவிட்டது மாதிரி ஜன சமூகம் இடங்காணாமல் கூடியிருந்தது. கங்கை கொண்ட சோழீச்சுவரம் என்ற சிவாலயம் கட்டி முடிந்து அன்று கும்பாபிஷேகம்.

சோழ சாம்ராஜ்யத்தின் சிற்றரசர்கள் எல்லோரும் அங்கே வந்திருந்தார்கள். ராஜேந்திரனின் சகோதரி குந்தவையும், அவளுடைய கணவன் வேங்கியரசன் விமலாதித்தியனும் இளவரசன் ராஜராஜனும்

வந்திருந்தார்கள்.

மாளிகைக்கு அருகேதான் கோவில். இரண்டிற்கும் சமீபத்தில் சமுத்திரம்போல அலை கொண்டு கொந்தளித்துக்கொண்டிருந்தது ராஜேந்திரனால் புதிதாகக் கட்டப்பட்ட சோழ கங்கம் அல்லது பொன்னேரி என்ற பெரிய ஏரி. தெற்கே கொள்ளிடக்கரையிலிருந்து வடக்கே உடையார் பாளையம் வரையிலுள்ள பிரதேசம் முழுவதையும் வளப்பம் ததும்பும் வரிசை நாடாக மாற்றியது அந்த ஏரிதான். அறுபது மைல் நீளமுள்ள வாய்க்கால் ஒன்று கொள்ளிடத்திலிருந்து வெள்ளத்தைக் கொண்டு வந்து அதில் கொட்டிற்று. அதிலிருந்து பல சிறு கால்வாய்கள் பிரிந்து சென்று நாடு முழுவதும் நரம்புகள் போல ஓடின.

மாளிகையைச் சுற்றியிருந்த மதிற்சுவரின் அருகே அகண்ட கால்வாய் ஒன்று வழிந்தோடிக்கொண்டிருந்தது. கரையோரமாக இருந்த விஸ்தாரமான அரண்மனைத் தோட்டத்திற்குள்ளும் குறுக்கும் நெடுக்குமாகப் பல சிறு கால்வாய்கள் சென்றுகொண்டிருந்தன. அவைகளிலும் புது வெள்ளத்தின் சென்னிறமான ஜலம் மிதந்து சென்றுகொண்டிருந்தது. எங்கு பார்த்தாலும் நீரும் நிழலுமான தோற்றம்.

ஆனி மாதம். இளவேனில் எங்கும் பரவி கனிந்து நின்ற பருவம். சிறந்த சிற்பிகளைக் கொண்டு, தஞ்சைக் கோவிலைப்போல உருவம் கொண்டதாக ராஜேந்திரனால் கட்டப்பட்ட அந்தக் கோவிலின் சித்திரப்பாடிற்கு இணையற்ற ஒரு பகைப்புலனாக நிற்கவே வந்தது போலிருந்தது அந்த இயற்கைக் காட்சி. கோவிலிலும், மாளிகையிலும், நகரிலும் நாட்டிலும் சோழ இலச்சினையுடன், வசந்த காலத்தின் இறுதியில் ஏடுகட்டி நிற்கும் இனிப்பும், கலகலப்பும், ஆனந்தமும் கொடிகட்டிப் பறந்தன. மனிதனும் இயற்கையும் போட்டி போட்டுக்கொண்டு வேலை செய்தது போல அங்கே உயிரும் உணர்ச்சியும் பொன்னேரியைப் போல பொங்கி வழிந்துகொண்டிருந்தன.

ராஜராஜன் அந்த அரண்மனைத் தோட்டத்திலுட்கார்ந்துகொண்டு மெய்மறந்தான். சோழ நாட்டில் சொட்டும் இனிப்பு ஒவ்வொரு புலனிலும் ஏறி அவனை மது மயக்கம் கொள்ளச் செய்தது. அந்த சோழ நாடென்னும் சோலையில் வளர்ந்து வந்த கிளியை அவன் இன்னும் பார்க்கவில்லை. கண்டதும் காதல் என்பார்கள். ராஜராஜன் காணாமலேயே காதல் கொண்டுவிட்டான். நாடும், இடமும், காலமும் அம்மங்காவை அவன் மனக்கண்முன் சித்தரித்து நிறுத்தின. அவன் அவளைப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லாமலிருந்தது.

‘இந்த எழிலின் நடுவே எழிலைத் தவிர வேறென்ன பிறக்க முடியும்? மேகத்தில் மின்னலைத் தவிர வேறென்ன பிறக்கும்? என்னைச் சுற்றியிருக்கும் இந்த சுகச்சூழ்வின் சாரமாகத்தான் இருப்பாள் அம்மங்கா! அதில் என்ன சந்தேகம்?’ என்று சொல்லிக்கொண்டான் ராஜராஜன்.

அந்த இயற்கை லாவண்யம் அவனுடைய புலன் வாயில்களில் தீ போலத் தாக்கி அவனுடைய பால் உள்ளத்தைப் பொங்கச் செய்தது. அந்தப் பூரிப்பில் அவன் பரவசமானான்.

மங்கள வாத்தியங்கள் எங்கும் கோஷித்துக்கொண்டிருந்தன. ஜன சமூகம் ஒரு கடல் போலக் கூச்சலிட்டுக்கொண்டிருந்தது. எல்லாச் சத்தங்களுக்கும் மேலாக அதிர்வெடிச் சத்தம் அடிக்கடி வரிசை வரிசையாகக் கிளம்பி இடிபோல எதிரொலித்தது. அவை ஒன்றிலும் அவன் மனது செல்லவில்லை. ராஜேந்திரனுடைய செயற்கையாகிய அந்த ஆடம்பரமான உற்சவத்தின் காம்பீரியத்தில் அவன் மனது ஈடுபடவில்லை. எல்லோரும் கும்பாபிஷேக சமயம் நெருங்கிவிட்டதென்று கோவிலுக்குப் போனார்கள். ராஜராஜன் போகவில்லை. அவன் பின்தங்கிவிட்டான்.

அவன் இருந்தது பிரகிருதியின் கோவில். அதில் நித்தியம் கும்பாபிஷேகம். அதை விட்டுவிட்டு அவன் வேறெங்கு போகவேண்டும்?

‘பிரகிருதியின் சௌந்தரியம் இச்சோழநாட்டைப் போல வேறெங்கும் இவ்வளவு சோபையுடனில்லை! கோதாவரியும் கிருஷ்ணாவும் அணைத்து வளர்க்கும் என் வேங்கி நாடுகூட இதற்கு அப்புறந்தான். இவ்விடத்தில்தான் பருவம் வந்த மடந்தையிடம் போல அழகு இயற்கையின் தேகத்தில் பூத்து நிற்கிறது. மரம் செடி கொடிகளிலிருக்கும் தளதளப்பின் ஈரம் நித்திய யௌவனத்தின் பசையைக் கொண்டிருக்கிறது. காதலும் அதன் கனிவும் இங்கே நிழல் தட்டி நிற்கின்றன. இந்தச் சௌந்தரியம் என் கண்ணுக்கு அம்மங்கா தேவி சாயல் கொண்டது போலத் தென்படுகிறது. இது என்னுடையது! இந்நாடு என்னுடையது! அம்மங்கா என்னுடையவள்! அம்மங்கா!’

ராஜராஜன் மெய்மறந்தவனாய் வாய்விட்டுக் கத்திவிட்டான். கத்தின பிறகுதான் அவனுக்குச் சுய நினைவு வந்தது. வெட்கம் கொண்டவனாய் யாராவது பார்த்துவிட்டார்களோ என்று சுற்று முற்றும் கவனித்தான். யாரும் அருகே இருந்ததாகத் தெரியவில்லை.

அவ்வளவு ஜாக்கிரதையாக மரத்தின் பின்னால்

பதுங்கியிருந்துகொண்டு அம்மங்கா தேவி ராஜராஜன் பேசினதைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் மார்பு அடித்துக்கொண்ட வேகம் அவளைத் திடுக்கிடச் செய்தது. சத்தம் செய்யாமல், கைகால் அசைக்காமல் இன்னும், ஒரு நிமிஷம்கூட அங்கே பதுங்கியிருக்க முடியாதென்றும் தோன்றியது அவளுக்கு.

மனக்கிளர்ச்சியைத் தாங்கமாட்டாமல் அவள் தோட்டத்திற்கு வந்தாள். அரண்மனைக்குள் இருந்தால் கோவிலுக்கு வரும்படி நிர்ப்பந்திப்பார்கள் என்று அவளுக்கு பயம். கோவிலுக்குப் போகக்கூடாதென்பதில்லை. அதன் வேலை நடக்கும்போது அவள் அதில் எவ்வளவோ சிரத்தை எடுத்துக்கொண்டு சிற்பிகளுக்குக்கூட யோசனைகள் கூறியிருக்கிறாள். ஆனால், அவளுடைய மனம் இருந்த நிலையில் கோவிலுக்குப் போவதுகூட பூஜை வேலையில் கரடி ஓட்டுவது போன்றதாகப் பட்டது.

அவ்வளவு நாள் அவள் கண்டறியாத ஒரு உணர்ச்சிப் பெருக்கு அவளை நிலை கொள்ளாமல் செய்தது. அதை அவள் இன்னதென்று நிச்சயமாக நிர்ணயம் செய்ய முடியவில்லை. பரிசீலனை செய்து பார்த்தாள். அன்று கும்பாபிஷேகம் என்பதினாலா அந்த உள்ளக் களிப்பு? இல்லை! அத்தையும் மாமனும் வந்திருந்தார்கள் என்றதனாலா? இல்லை! ராஜராஜன் வந்திருந்ததாலா? எப்படி இருக்க முடியும்? அவனை இன்னும் கண்ணால் கூடப் பார்க்க முடியவில்லையே! அவன் எப்படி இருப்பான் என்று கூடத் தெரியாதே! ஆனால், அவனைப் பார்க்க வேண்டுமென்று ஆவல் மட்டும் வெட்கமின்றி தலையெடுத்ததை அவள் உணர்ந்தாள். அத்தை குந்தவையைப்போல இருப்பான் என்று கேள்விப்பட்டிருந்தாள். அத்தையைப் பார்த்ததும் அவள் மனதைப் பறிகொடுத்துவிட்டாள் - ராஜராஜனுக்கு. ஆகையால் அவள் களிப்பு கொண்டாள். தன் மனதைப் பறிகொடுத்ததற்காகவா? - சோலை மலரைப்போல தன் உள்ள இதழ்களை விரித்து மணத்தை வெளியே வீசி எறிந்தாள். அந்தத் தியாகத்திற்குப் பிறகு அவள் மனது பளு குறைந்தது போல லேசாக மிதந்தது. ஆனால், ஒரு கவலையுமிருந்தது. ஒரு பரபரப்பும் துடிப்பும்கூட இருந்தது. அந்த மணம் காற்றில் கலந்து வீணாகாமல் ராஜராஜன் புலனில் போய்த் தாக்குமா என்று ஏங்கினாள்.

ராஜராஜன் ‘அம்மங்கா!’ என்று பிரிவாற்றாமை கொண்ட பறவையைப் போல அலறியதைக் கேட்டுக்கொண்டிருந்த அம்மங்கா தேவி இளகினாள். அந்தத் தாபம் நிறைந்த அழைப்புக்கு பதில் சொல்லாமல் இருக்க முடியவில்லை அவளால்.

அங்கங்களை மயிர்க்கூச்சல் உதறியெடுக்க அவள் மெள்ள

மறைவிலிருந்து வெளியே வந்தாள். அவளுடைய புது ஆடை செய்த சத்தத்தைக் கேட்டு ராஜராஜன் திரும்பிப் பார்த்தான். அழகு அவன் முன்னே உருவெடுத்து வந்து நின்றதோ என்று பிரமை கொண்டான்.

மாநிறமான உடலில் நன்றாக மஞ்சள் பூசிக் குளித்து நெற்றியில் குங்குமம் இட்டிருந்தாள். நன்றாகக்கூட உலராத கூந்தலை மேலாக எடுத்துச் சொருகி அதில் மலர் வைத்து முடித்திருந்தாள். காதணிகளும் தோள்வளைகளும் கை வளைகளும் மரங்களின் நிழலின் நடுவே பாய்ந்து வந்த சூரிய கிரணங்களில் நவரத்தின காந்தியுடன் ஜொலித்தன. மஞ்சள் பட்டு ஆடை உடுத்திருந்தாள். கழுத்தில் சம்பங்கிப் பூமாலை அணிந்திருந்தாள்.

‘அம்மங்கா!’ என்றான் ராஜராஜன்.

‘அத்தான்!’ என்று மெல்லிய குரலில் அம்மங்கா தேவி பூ திறந்து பேசுவது போல மொழிந்தாள்.

அவ்வளவுதான்! பலஹீனமான வார்த்தைகள் அவர்களுடைய நெஞ்சிலிருந்து கிளம்பி உதடுகளினருகே வந்து வெட்கிப் பின் வாங்கின. இருவரும் பரஸ்பரம் பரவசத்தால் சில நிமிஷங்கள் பேச்சற்று நின்றார்கள். அந்த மகா மௌனத்தில் இருவர் உள்ளங்களும் உரையாடின. அம்மங்காதான் முதலில் பிரக்ஞையடைந்தாள்.

‘கோவிலுக்குப் போகவில்லையா?’ என்றாள்.

‘கோவிலுக்கா! நாம் நிற்பது கோவிலில்தானே?’

‘கோவிலா!’

‘இது பிரகிருதியின் சன்னதி!’

அம்மங்கா பரவசம் கொண்டவள் போலக் கண்ணெடுத்து அந்தச் சோலையைச் சுற்றிப் பார்த்தாள். ஆனந்தம் அதில் எதிரொலித்து நிறைந்திருந்தது.

பட்சிகள் சகல வாத்தியங்களையும் வாசித்தன. ராஜராஜன் அம்மங்காவின் கையைத் தன் கையில் எடுத்துக்கொண்டான்.

- 1943

# 8. ராஜேந்திரன் கனவு

ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கன்று மாலை. சக்கரவர்த்தி ராஜேந்திர சோழன், தன் புதிய தலைநகர் கங்கை கொண்ட சோழபுரத்து அரண்மனையின் உப்பரிகையில் உட்கார்ந்துகொண்டிருந்தார். பக்கத்தில் அவருடைய சகோதரி வேங்கிநாட்டு அரசி, குந்தவை, உட்கார்ந்துகொண்டு சக்கரவர்த்தியின் முகத்தை வாஞ்சையுடன் பார்த்துக்கொண்டிருந்தாள்.

ராஜேந்திர சோழனுக்கு அப்பொழுது வயது சுமார் ஐம்பத்தைந்திருக்கும். குந்தவைக்கு நாற்பதிருக்கலாம். மன்னன், ராஜ்ய விவகாரங்களை இளவரசன் ராஜாதி ராஜன் கையில் ஒப்படைத்துவிட்டார். அவர் எண்ணிய காரியங்களை அநேகமாகச் செய்து முடித்துவிட்டதால் ஓய்வு எடுத்துக்கொண்டுவிட்டார்.

அரண்மனைக்குப் பக்கத்திலிருந்த சோழகங்கம் கொள்ளிடத்தின் பிரவாகத்தைப் பெற்று நிறைந்து தத்தளித்துக்கொண்டிருந்தது. ஆகாயத்தில் கருமேகங்கள் குவிந்து அஸ்தனமத்திற்கு முன்பே இருளைத் தோற்றுவித்தன. திடீரென்று ஒரு பெரும் காற்று, எங்கிருந்தோ கிளம்பி வந்தது போல வந்து, புழுதியைக் கிளப்பிற்று. மரங்கள் அலங்கோலமாக அங்குமிங்குமாகச் சாய்ந்து ஆடின. அவைகளின் நடுவே கங்கை கொண்ட சோழீசுவரத்தின் கோபுரம் உயர்ந்து கர்வத்துடன் தலையெடுத்து நின்றது.

அரசன் அதன் கொடுமுடியை அகமகிழ்ந்து பார்த்துக்கொண்டிருந்தார்.

"ராஜேந்திரா! என்ன அந்த சிகரத்தை அப்படிப் பார்க்கிறாய்?" என்று குந்தவை கேட்டாள்.

"அதுவா! என் கனவு, வெறும் கனவாக, என் மனத்திலேயே இல்லாமல், உண்மையாக நடை முதலில் வந்துவிட்டதற்கு இந்தக் கோபுரம் பிரத்தியக்ஷமான அடையாளம் அல்லவா?"

"ஆமாம்!"

"என் உயிரின் உன்னத ஆசைகளெல்லாம் ஒன்றாய்ச் சமைந்து, அதன் கொடுமுடியில், பொற்சிகரமாகக் கிளம்பி விளங்குகிறது. எனது கனவு கடைசியாக உருக்கொண்டுவிட்டது!"

"எனக்குத் தெரியாதா என்ன? அண்ணா, உன் கனவுக்குக் காரணம் யார்? நினைவிருக்கிறதா?" என்று குந்தவை சிரித்துக்கொண்டு

கேட்டாள்.

“இருக்கிறது அம்மா, நன்றாக இருக்கிறது. நீதான் அந்தக் கனவை என் மனத்தில் கற்பித்தவள். ஆஹா, அந்த நாட்களில், நான் வேங்கி நாட்டு வெற்றியிலிருந்து திரும்பிய பொழுது - நீதானே, என்னை, அல்லும் பகலுமாக, தூண்டித்தூண்டி வெற்றிமேல் வெற்றிகொள்ளச் செய்தாய்! ஆம்... நீதான்! எல்லாம் உன் உற்சாகம்தான். பொன்னி நாட்டின் புலிக்கொடியில் நாம் கொண்ட பெருமைதான் என்ன! நமது விஜயாலய வம்சத்தில்-! அன்று புகாரில் பறந்த கொடி இன்று நாடெங்கும் பறக்கிறது! என் கனவின் - உன் கனவின் பலனாக! கங்கைக் கரையிலிருந்து குமரி முனை வரையில், கடாரத்திலும், ஈழநாட்டிலும் - இன்று அலைக்காற்றை எதிர்த்து நிற்கிறது நமது கொடி!”

“ஆமாம்! நீ கங்கை கொண்ட சோழன்; உன் தலைநகர் கங்கை கொண்ட சோழபுரம்; நம் எதிரில் வானத்தை நோக்கி எழுந்து நம்முடைய ஆர்வம் போல நிற்கும் இந்த அற்புதக்கோவில், கங்கைகொண்ட சோழீசுவரம்! இதோ, பக்கத்தில், கடல்போலப் பரவி நிற்கும் இந்தப் பொன்னேரி - நீ உண்டாக்கியது!... அண்ணா, சோழ சாம்ராஜ்யம் சாசுவதமாகிவிட்டது! அதன் அடையாளங்களான இந்த நகர், இந்தக் கோவில், இந்த ஏரி, - எல்லாம் சாசுவதம். நீயே - கங்கைகொண்ட சோழனாகிய நீயே - காலாந்தரத்திற்கும் சாசுவதமாகிவிட்டாய்!'

குந்தவை உணர்ச்சிப்பெருக்கில் மெய்மறந்து பேசினாள். ராஜேந்திரனும் ஒருவிதமான பரவசம் பொங்க ஆழ்ந்த யோசனையிலாழ்ந்தார்.

“என்ன யோசிக்கிறாய்?” என்று குந்தவை கேட்டாள்

“'இன்று நான் கிருதார்த்தன்! நினைத்ததையெல்லாம் சாதித்துவிட்டேன்! அபஜயம் என்பது என்னவென்று எனக்குத் தெரியாது. பணியாத சத்துருவே எனக்குக் கிடையாது!”

“ஆமாம்!”

“'சோழ சாம்ராஜ்யம் ஸ்தாபிதமாகிவிட்டது. இனிமேல் அதற்குச் சிதைவு கிடையாது - அப்படி அஸ்திவாரம் போட்டு அதை எழுப்பிவிட்டேன்.. ஆனால்...”

“ஆனால்-என்ன? உனக்கென்ன குறைவு இன்று?”

“ஆ! குறைவும் இருக்கிறது! உதாரணமாக, என் நாட்டில், என் சமஸ்தானத்தில், சிறந்த கவி ஒருவன் இல்லையே!”

“கவியா! நீயேதான் தலைசிறந்த கவியாக இருக்கிறாயே!”

“நானா!”

“ஆமாம், நீதான் உன் நாட்டின் உத்தம கவி. இந்த நிகரற்ற கோவிலும் குளமும் அடங்கிய இந்த நகரம் நீ இயற்றிய மகா காவியமல்லவா...? யோசித்துப்பார்! இதிகாச புராண காலத்திற்குப் பிறகு கற்பனையிலும் காரிய சித்தியிலும் உனக்கு நிகரான மேதாவி எவன் இருந்திருக்கிறான்?”

“'நீ அப்படிச் சொல்லாதே! நீ என்னிடம் கொண்டிருக்கும் அன்பு உன் திருஷ்டியை மறைக்கிறது. எவ்வளவோ சரித்திர புருஷர்கள் எனக்கு முன், காலத்திற்கேற்ப சமூக தர்மத்தை நிர்ணயம் செய்திருக்கிறார்கள். அவர்களைப்போல பெருங்காரியம் ஒன்றும் நான் செய்துவிடவில்லை. ஆசாரிய புருஷர்கள், தீர்க்கதரிசிகள், சக்கரவர்த்திகள் எத்தனை பேர்! புத்தன், சங்கரன், அசோகன்-”

“அசோக சக்கரவர்த்திக்கு இணையாகச் சொல்லக்கூடிய சரித்திரம் கொண்டவன்தான் நீ!”

“இல்லையம்மா, இல்லை! அந்த ராஜரிஷியின் உலகளாவிய காருண்ய சேவை - அதற்கு ஈடேது?”

“நான் சரித்திர திருஷ்டியுடனேயே யோசித்துத்தான் பார்த்திருக்கிறேன். உன்னிடமிருக்கும் சில அம்சங்கள் அவரிடம் இல்லையே. அதற்கென்ன சொல்லுகிறாய்? அசோகனுக்கு அடுத்தபடி நீதான் பாரத பூமியில் மாபெரும் மன்னன்!”

“எனக்கு யுத்தங்களில் ஏற்பட்ட வெற்றிகளைக் கொண்டா சொல்லுகிறாய்?”

“இல்லை. உன் நிர்மாண வேலையிலிருந்து. சோழ நாட்டுத் தலைநகரையே புதிதாக சிருஷ்டித்தாய்!”

“தஞ்சை பொன்னி நாட்டின் பொக்கிஷம்தான். ஆனால், இன்று சோழ சாம்ராஜ்யம் பொன்னி நாட்டின் எல்லைக்கு மேல் போய் அகண்ட பாரத பூமியாக ஆகிவிட்டபடியால், தஞ்சையை மட்டும் கொண்டு நாட்டை நடத்த முடியாது. ராஜ்யம் நிலைகொள்ள வேண்டுமானால், பல செழிப்பான நகரங்கள் பல இடங்களில் உண்டாகி, கூடார முளைகள் போல, அதன் விரிப்பைத் தாங்கி நிற்க வேண்டும். இன்று கங்கை கொண்ட சோழபுரம்—நாளை இன்னும் வடக்கே இன்னொரு நகரம்—அதற்குமேல்—” என்று ராஜராஜன் சொல்வதற்குள் குந்தவை தலையிட்டு “கங்கை ஜலத்தைக் கொண்டுவந்து இந்த ஏரியில் கொட்டி, இதை ஜலமயமான ஒரு ஜய ஸ்தம்பமாக்கினாய்!” என்றாள்.

“இது கங்கை போல எந்நாளும் பெருகி, நாடு அமோகமாகச் செழிக்க வேண்டும்!”

“தஞ்சைக் கோவிலைக் காட்டிலும் அதிகமாக சிற்ப வேலைப்பாடு கொண்ட இந்தக் கோவிலை, மயன் சிருஷ்டிபோல் எழுப்பினாய்!”

“தென் நாட்டினுடைய கலைஞானத்தின் ஓர் உருவமாக இது நிரந்தரமாக நிற்கட்டும்!”

“பொட்டலைப் பட்டணமாக்கிவிட்டாய்!”

“புனிதமான இந்தக் காவிரி நீர் மலட்டு பூமியில் ஈரமேற்றிவிட்டது. இதைப்போல இன்னும் ஐந்து ஜீவநதிகள் இந்த நாட்டில் புனல் நிறைந்து வழிகின்றன. அந்த நதிகளின் ஜலத்தையும் இந்த மாதிரி, பல முடி கொண்டான் வாய்க்கால்கள் மூலம் தரிசுகளின் மேல் திருப்பி தங்கம் விளையச் செய்யவேண்டும். எங்கும் வயல்கள் வண்டல் கட்ட வேண்டும். பொன் விளைய வேண்டும். மக்கள் மகிழ்ச்சிச் சமூகமாக வேண்டும்... ஆகையால், குந்தவையே!”

“ஆகையால் என்ன?” என்று குந்தவை ஆச்சரியமடைந்து கேட்டாள்.

“என் கனவு—” என்று ராஜேந்திரன் பேச முடியாதவர் போல் தடுமாறினார்.

“ஏன், உன் கனவிற்கென்ன?”

“இப்பொழுதுதான் உருக்கொள்ள ஆரம்பிக்கிறது! நான் செய்ததெல்லாம் இனிமேல் செய்யப்போவதற்கு உரைபோடக் காணாது!”

வயது சென்ற மன்னன் திடீரென்று ஆசனத்தை விட்டுக் குதித்தெழுந்தார்.

“அண்ணா! உனக்கென்ன பேராசை? மனிதன் முயற்சியில் இதற்கு மேல் என்ன செய்யமுடியும்?”

“என்ன செய்துவிட்டேன்! என் கீர்த்திக்காக சாம்ராஜ்யத்தை சிருஷ்டி செய்திருக்கிறேன். மக்களுக்காக என்ன செய்திருக்கிறேன் சொல்லு?”

“உன் செயல்களின் பயனையெல்லாம் அவர்கள்தானே அனுபவிக்கிறார்கள்? கடாரம் கொண்டதால் வியாபாரமும் கைத்தொழில்களும் எவ்வளவு விருத்தி அடைந்துவிட்டன—இவ்வளவு சீக்கிரமாக, நம் கண்முன்னேயே? சிங்களமும் பாண்டிய நாடும் சாம்ராஜ்யத்திற்கு எப்பேர்ப்பட்ட செல்வங்கள்?”

“அறிவு வளர்ச்சிக்கு என்ன செய்திருக்கிறேன்?”

“எவ்வளவோ செய்திருக்கிறாய்!”

“இந்தக் கோவிலைக் கட்டியிருக்கிறேனே—இதை உண்மையாக அறிவிற்கு இடமாக்க வேண்டும். உரமேறிய நாட்டில் உயிர்ததும்ப வேண்டும். உயிரின் சிகரமாக, இந்தக் கோபுரம்போல், உண்மை ஓங்கவேண்டும்!”

மன்னன் மௌனமாகிவிட்டார். அவருடைய எண்ணங்கள் போன போக்கு வார்த்தைகளுக்குக் கிட்டவில்லை. குந்தவையும் அப்படியே சிலைபோல சமைந்துபோய் உட்கார்ந்திருந்தாள்.

திடீரென்று கண்ணைப் பறிக்கும் ஓர் ஒளி, உருகின தங்கத்தின் வர்ணத்துடன் பூமிமேல் விழுந்து மறைந்தது. மறுநிமிஷம் வானமளாவிய விமானங்கள் இடிவது போன்ற சத்தம் கேட்டது. இடி விழுந்தது.

அரசன் எண்ணங்கள் சடக்கென்று நின்றன. அவரது உள்ளம் மலர்ந்து உயர்ந்தபோது திடீரென்று அதைத் தாக்கிய ஒரு அபசகுனம் என்று அந்த இடியைக் கருதினார். சிறிது நேரம் கழித்து செய்திகள் வந்தன. இடி, கோவில் விக்கிரகத்தின் மேல் விழுந்து லிங்கம் பிளந்துபோய்விட்டது.

சோழகங்கம் கரையுடைந்து, பாசன நிலங்கள் முழுவதும் நீரின் கீழ் மூழ்கிவிட்டன! ராஜேந்திரன் அவ்விரண்டையும் சூசனைகளாகக் கொண்டார். சிலை அன்று சிதைவடைந்தாலும் கோவில் இன்றும் நிற்கிறது. சோழ சாம்ராஜ்யம் முன்னூறு ஆண்டுகள் கழித்து சிதைவு பெற்றாலும், சரித்திரத்தில் அழியாமல் இருக்கிறது.

“அண்ணா! கங்கை கொண்ட சோழபுரம் இவ்வளவுதான்?” என்று குந்தவை சோர்வுடன் கேட்டாள்.

“யார் கண்டார்கள்? நான் கண்டது இன்னும் கனவுதான் போலிருக்கிறது! சரித்திரமே கனவும் அதன் சிதைவும்தான் போலிருக்கிறது!—பிறப்பும் இறப்பும் போலவோ?” என்று ராஜேந்திரன் பணிவுடன் பேசினார்.

- 1943

# 9. தமிழ் மங்கை

“பூசுந்தரி, தென்னவன் தேவியாகிய நீயா அந்தப் பெண்ணைப் பார்க்க வில்லிப்புத்தூர் போவது?”

“மன்னவன் மதுசூதனன் தேவியைப் பார்க்கப் போவது உமது தோரணைக்குக் குறைவா?”

“அவள் யார்? அப்படி நீ போய் பார்க்கும்படி அவளிடம் என்ன விசேஷம்?”

“வேந்தே, நீங்களே இப்படிக் கேட்கலாமா? வைணவத்தை உமக்குப் போதித்து தத்துவார்த்தத்தை விளக்கிய விஷ்ணு சித்தன் கண்டெடுத்து வளர்க்கும் கன்னி கோதை. அவள் மற்றவர் போன்ற பிறவி அல்ல. அவள் உடலும் உணர்வும் நாம் அனுபவித்தறியாத ஒரு தெளிவில் ஈடுபட்டு இயங்குகின்றன. அதனால் அவள், மகளிர் மற்றெங்கும் பாடாத வகையில் பாசுரங்கள் பாடி மகிழ்கிறாள்.”

“தமிழ்ப் பாசுரங்கள் உனக்கு விளங்குகின்றனவா? கங்காராசன் கன்னியா ரத்தினமாகிய நீ இங்கு தென் நாட்டிற்கு வந்து வெகுகாலம் ஆகவில்லையே!”

“ஆவல் இருந்தால் எவ்வளவு காலம் வேண்டும்?”

“பூசுந்தரி, அவளை இங்கே வரவழைக்கிறேனே?”

“வடபெருங்கோயிலுடையானுக்கு மாலை சூடிக்கொடுக்கும் சுடர்க்கொடி இங்கே வரமாட்டாள்!”

பாண்டியன் மாறவர்மன் ராஜஸிம்ஹன் தன் தேவி கொண்டிருந்த ஆவலைக் கண்டு கொஞ்சம் அதிசயம் கொண்டான்.

“அவளைப் பார்த்து என்ன ஆகவேண்டும்? எல்லாக் கலைகளையும் கற்றறிந்த நீ அவளிடமிருந்து என்ன புதிதாகக் கற்றுக்கொள்ளப் போகிறாய்?”

“கற்றதெல்லாம் வீண், கற்காதது ஒன்று இருக்கிறது. அதுதான் கலைகளுக்குக் கலை. அதை அறிவுறுத்தக்கூடியவள் அவள் ஒருத்தித்தான்.”

“அது என்ன?”

“எனக்குச் சொல்லத் தெரியவில்லை; ஆனால் ஆண்டாளுடைய வாக்கின் உணர்ச்சியில் அது எனக்குப் புலனாகிறது.”

“பெரியாழ்வார் நமக்கு அருளிய போதத்தைக் காட்டிலுமா அது சிறந்தது?”

“அது வெறும் போதம் மட்டுமல்லவே! அது உணர்ச்சி!”

அப்பொழுது மகாசாமந்தன் மாறங்காரி வந்து பெரியாழ்வார் அரசனைக் காண வந்திருப்பதாகத் தெரிவித்தார். உடனே அரசனும் அரசியும் சென்று ஆழ்வாரை வரவேற்றார்கள்.

“வில்லிப்புத்தூர் விட்டு எவ்வளவு நாட்களாயினவோ?” என்று பாண்டியன் கேட்டார்.

“இப்போதுதான் வருகிறோம். எமது மகள் கோதையுடன் திருவரங்கம் செல்கின்றோம். பாதையில் தென்கூடற்கோன் தென்னனைத் தரிசித்துவிட்டுப் போகலாமென்று வந்தோம்.”

“கோதை எங்கே?” என்று பூசுந்தரி ஆவலுடன் கேட்டாள்.

“சீடர் ஒருவர் வீட்டில் இருத்திவிட்டு இங்கே வந்தோம்.”

“ஈரேழு வயதில் எழில் மிக்க பாசுரங்களை இயற்றிய அதிசய மங்கையைக் காண நான் பெரிதும் விரும்புகிறேன்.”

“மணப்பருவம் வந்தும் மணமகன் ஒருவனை ஏற்கமாட்டேன் என்கிறாள். அரங்கனே ஆருயிர் நாயகன் என்கிறாள். ஊரார் ஏசுகிறார்கள்.”

“இப்போது ஏது திருவரங்கம் செல்வது?”

“கடைசியில் அவள் ஆசையையே நிறைவேற்றுவதெனத் தீர்மானித்துவிட்டேன். அவளை அரங்கன் முன்னிலைக்கு அழைத்துச் செல்கின்றேன்.”

“வீதியில் ஏதோ சத்தம் கேட்கிறதே!” என்று மாறங்காரி சாளரத்தின் வழியே பார்த்தார். ஒரு கூட்டம் அரண்மனை வாயிலை நெருங்கிக்கொண்டிருந்தது. அரசியும் மற்றொரு சாளரத்தின் வழியாகப் பார்த்தாள்.

கூட்டத்தின் முன்னே பதுமை ஒருத்தி பதினைந்து வயது கொண்டவள். பருவத்தால் பூரித்திருக்க வேண்டிய உடல் மெலிந்து வாடி இருந்தது.

ஆனால் முகத்தில் அழகு சொட்டிக்கொண்டிருந்தது. கூந்தல் அவிழ்ந்து துவண்டுகொண்டிருந்தது. ஆடை குலைந்ததுகூடத் தெரியாமல் அப்படி மெய்மறந்தவளாய் ஆண்டாள் பாடிக்கொண்டே நடந்து சென்றாள்.

> மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத
> முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்

மைத்துனன் நம்பி மதிசூதனன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ நான்.

பூசுந்தரி நிலை தெரியாமல் வீதிக்கு ஓடி அந்த விசித்திர மங்கையின் கையைப் பிடித்துக்கொண்டு, "கண்டாயா அம்மா?" என்று உருகிக் கேட்டாள்.

"கண்டேன்!" என்று மொழிந்து கனவை நினைத்துப் புன்னகையுடன் நின்றாள் கோதை. அந்தத் தளிர் உடலை எத்தகைய தணல் தகித்துக்கொண்டிருந்தது? கனவை நினைந்து கருகி அப்படியே துவண்டு சாய்ந்தாள். பூசுந்தரி சாய்ந்த சுடர்க்கொடியைத் தாங்கிக்கொண்டாள்.

பெரியாழ்வார் ஓடிவந்தார்.

"அம்மா, நான் வருவதற்குள் கிளம்பிவிட்டாயா திருவரங்கத்திற்கு சிறிது நேரம்கூடப் பொறுக்கச் சக்தி இல்லையா உனக்கு?" என்று கதறினார்.

பாண்டியன் வந்தார். அரசியின் கைகளில் அயர்ந்து கிடந்த ஆச்சரிய உருவைக் கண்டு அருள் கொண்டவர் போல, "ஆ, இப்புண்ணியப் பாவை உலவும் பாண்டிய நாடு புனித நாடு!" என்றார்.

பூசுந்தரி மெய் சிலிர்ப்பவளாய் மெதுவாகக் கோதையைத் தாங்கி தன் அறைக்கு இட்டுச் சென்றாள்.

ஆண்டாள் அறிவிழந்துபோயிருந்தாள்.

"அம்மா, உடல் எப்படி மெலிந்துபோய்விட்டது! நூறாண்டு காலத்து ஆசையைப் பதினைந்தாண்டில் அனுபவித்து அழிந்துவிட்டது உடல். உடல் கொள்ளவேண்டிய இன்பம் அனைத்தையும் உள்ளத்தே கொண்டுவிட்டாய்! கண்ணே, கண்திற. இன்று 'மார்கழித் திங்கள்—மதி நிறைந்த நன்னாள்!' என்றாள் பூசுந்தரி.

கோதை கண்திறந்து "இன்றா?" என்றாள்.

"மாயனை மன்னு வடமதுரை மைந்தனை-"

என்று ஆரம்பித்து மறுபடியும் மூர்ச்சை அடைந்தாள்.

அவள் பாடிய பாட்டு எங்கும் எதிரொலித்துப் பரவியது.

வேறெங்கும் பெண் பாடாத பேரவாவும் பொலிவும் பெரு துணிவும் கொண்ட பாசுரங்கள் தமிழ் மொழியின் தெள்ளிய அமுது.

- வசந்தம், மே-1943

# 10. வெற்றிக்குப் பின்

கிருஷ்ணதேவராயர் திடீரென்று ஏன் அப்படிக் கலக்கம் கொண்டுவிட்டார் என்று மந்திரி திம்மரசுக்கு விளங்கவில்லை. பிள்ளைப் பருவ முதலே அரசரைப் பயிற்சி செய்து அவருடைய மனப்போக்கை நெருங்கி அறிந்தவர்; ஆனாலும் அந்த வெற்றிக்குப் பிறகு ஏற்பட்ட மன்னனின் மனநிலையை அவரால் ஊகிக்க முடியவில்லை. ஆசிரியர் என்ற முறையிலும் வயது சென்றவர் என்ற முறையிலும் அவருக்குச் சலுகை அதிகமாக இருந்தது; இருந்தாலும் அப்பொழுது அரசர் பட்ட சங்கடத்தைக் கண்டு அவர்கூடச் சட்டென்று அருகில் நெருங்கிக் காரணத்தைக் கேட்க முடியவில்லை.

சரித்திரத்தின் மகத்தான போர்களில் ஒன்று அன்றைய தினம் நடந்து முடிந்தது. விஜயநகர சாம்ராஜ்யத்தின் கௌரவமே அன்றுதான் நிலை பெற்றது. ஹிந்து ராஜ்யங்களை ஒவ்வொன்றாக வீழ்த்தி ஹிந்துஸ்தானத்தில் தமக்கு மிஞ்சினவர்கள் இல்லை என்று தலையெடுத்து நின்ற மகமதியர்களுக்கு அன்றுதான் முதல் முதலாக பெருத்த தோல்வி ஏற்பட்டது.

ஹிந்துக்கள் மறுபடியும் தம் நாட்டில் தலைதூக்க வேண்டும் என்ற பேரவாக் கொண்டு விஜயநகர சாம்ராஜ்யத்திற்கு அடிகோலினவர்கள் ஹரிஹரர் - புக்கர் என்ற இரு சகோதரர்கள் என்பது சரித்திரம். இந்திய நாகரிகத்திலும் இலக்கியத்திலும் அழியாப் பெயர் பெற்றுவிட்ட பம்பாதீரத்தில் நான்கு புனிதமான பருவதங்கள் கோட்டைச் சுவர்கள் போல நின்ற புண்ணிய பூமியில் வித்தியா நகரம் என்ற விஜயநகரத்தை அவர்கள் ஸ்தாபித்தார்கள். அதில் அவர்களுக்கு ஊக்கமும் ஒத்தாசையும் அளித்தவர் வித்தியாரண்ணிய ஸ்வாமி.

அந்த சிம்மாஸனத்தில் ஏறினதுமே கிருஷ்ணதேவராயர் முன்னோர்கள் துவக்கிய தூய வேலையில் மும்முரமாக ஈடுபட்டார். ஹிந்து சாம்ராஜ்யம் ஒன்றை அசையாத அஸ்திவாரத்தில் கட்டி உயர்த்த வேண்டுமென்ற ஒரே லட்சியத்தை உயிர் நோக்கமாகக் கொண்டு அல்லும் பகலுமாகப் பாடுபட்டார். விஜயநகரத்தையே சீர்திருத்தி நாட்டின் வளத்தை அபிவிருத்தி செய்தார். விஜயநகரம் செல்வக் களஞ்சியம் என்று அயல்நாட்டு யாத்திரிகள் ஏகமனதாகப் புகழும்படி நாட்டைப் பல வகைகளிலும் சிறப்பித்தார். பெரிய படை திரட்டி அதற்குத் தக்க பயிற்சி அளித்தார். இந்த வேலைகள் எல்லாவற்றிலும் அவருக்குத் துணையாக இருந்து யோசனை கூறி உதவி செய்தவர் அப்பாஜி என்று பெயர்போன

திம்மரசு.

தம்முடைய ஏற்பாடுகள் யாவற்றையும் சரிவரச் செய்த பிறகுதான் கிருஷ்ணதேவராயர் பீஜபூர் சுல்தான் அடில்ஷாவுடன் போர் புரிய முனைந்தார். முதலில் விஜயநகர ராஜ்யத்தைச் சேர்ந்திருந்து பிறகு பீஜபூர் சுல்தானால் கைப்பற்றப்பட்ட ராயச்சூரை மறுபடியும் அதில் சேர்க்க வேண்டியது தமது முதல் கடமை என்று தீர்மானித்தார். 1520ஆம் வருஷம், தாம் பட்டத்துக்கு வந்த பனிரண்டாவது வருஷம், தமது முப்பத்திரண்டாவது வயதில், ராயச்சூரின் மேல் படையெடுத்து, கடும்போர் புரிந்து மகமதிய அரசனைத் தோற்கடித்து ராயச்சூரைக் கைப்பற்றினார்.

அன்றிரவுதான் ராயர் அவ்வளவு கலங்கிப்போனது. ராயச்சூர் கோட்டையின் ஒரு பகுதியின் மேல் தளத்தில் உலாத்திக்கொண்டிருந்தார். பூர்ணிமை நிலா பளிச்சென்று காய்ந்து யுத்தத்தைக்கூட ஒளியில் அமுக்கிக்கொண்டிருந்தது. தூரத்தில் தெரிந்த பீஜபூர் எல்லையைப் பார்த்த வண்ணம் திடீரென்று ராயர் யோசனையில் ஆழ்ந்துவிட்டார்.

வீராவேசத்துடன் தாமே முன் நின்று ராயர் போரை நடத்தினார். சுல்தானின் சேனை எதிர்பாராத வகையில் முறியடிக்கப்பட்டு பீஜபூரை நோக்கி ஓடிவிட்டது. அதைப் பார்த்துப் பெரும் மகிழ்ச்சி அடையவேண்டியிருக்க, அரசன் விசனம் அடைந்திருந்தது அப்பாஜிக்கே அர்த்தமாகவில்லை. வெகுநேரம் பொறுத்த பிறகு மெதுவாக அரசனை நெருங்கினார்.

“இன்று அடைந்த தோல்வியிலிருந்து சுல்தான் தலைதூக்க முடியாது. விஜயநகரம் இன்று உண்மையிலேயே விஜயநகரம் ஆகிவிட்டது... இனிமேல் மேற்கொண்டு அரசர் தம் கவனத்தைத் தெற்கே செலுத்தலாம்” என்று அப்பாஜி ஆரம்பித்தார்.

“அப்பாஜி, நாம் இப்பொழுது இன்று, வெற்றி பெற்றுவிட்டது உண்மைதான். ஆனால் அது பெரிதன்று. இந்த வெற்றியைப்பற்றிப் பூரணமாக இப்பொழுது யோசிக்கிற பொழுதுதான் அதன் பொருளும் தொடர்பும் எனக்கு விளங்குகிறது. இதற்கு முன் வெற்றியில் என் மனது சென்றது. இப்பொழுது என் திருஷ்டி வெற்றிக்குப் பின் சென்று பார்க்கிறது.”

“வித்தியாரண்ய முனியின் லட்சியம் இன்று நிறைவேறிவிட்டதென்றே சொல்லலாமல்லவா?” என்று அப்பாஜி கொஞ்சம் ஊக்கங் கொடுத்துப் பேசினார்.

“சொல்லலாம், அவரும் அவருடைய சகோதரர் ஸாயனரும் நம் மூதாதையருடன் ஆதி மூர்த்திகளாக நின்று ஆரம்பித்த இந்தப் புத்துயிர் இயக்கம்—ஆமாம், இது நமது ஹிந்து தர்மம் மறுபடியும் நிலைபெற வேண்டி ஏற்பட்ட ஊக்கம்தான்—இன்று இந்த வெற்றியில் கொடிகட்டிப் பறக்கிறது. நமது நாகரிகம் சோர்வகன்று திரும்பவும் கிளைக்க வேண்டும் என்று பெரியோர்கள் அன்று செய்த சங்கல்பம் இன்று பலன் பெற்றுவிட்டது... ஆமாம், அதைப் பற்றித்தான் யோசித்துக்கொண்டிருக்கிறேன்.”

“பல்லாயிரம் வருஷங்களாக அலைமேல் அலையாக வந்த படையெடுப்புகளையெல்லாம் வசிஷ்ட தண்டம் போல வாங்கி ஐக்கியம் செய்துகொண்ட நமது நாகரிகம் ஐநூறு வருஷங்களுக்கு முன் தோன்றிய இந்தப் படையெடுப்பின் முன் நாணல் போலத் தணிந்துவிட்டது. வெள்ளம் நாடெங்கும் பரவி இந்தத் தென் தேசத்திற்கும் வந்துவிட்டது. இதன் எல்லையிலாவது அதை அணைபோட்டு நிறுத்தவேண்டும். அந்தமட்டில் நமது வெற்றி சரிதான். ஆனால், இந்த வெற்றி நிரந்தரமாக வேண்டுமே! இந்த அணை நிற்குமா?”

“ஏன் நிற்காது? நாம் தெற்கே சென்று ஹிந்து சமுதாயத்தை ஒன்றுபடுத்தி விஜயநகரத்தை பலப்படுத்தவோம்.”

“அதற்குத்தான் இப்பொழுது எனக்கு வகை தெரியவில்லை!”

“அரசர் சொல்லுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இந்த வெற்றியை நாம் எந்த வகையில் பெற்றோம், அதே வகைதானே!”

“அப்பாஜி, இந்த வகை நீடித்து நடக்காது. பலாத்காரத்தினால் ஏற்பட்ட இந்த வெற்றி தாற்காலிகமான வெற்றிதான். எதிரிகள் இன்றில்லையென்றாலும் என்றாவது மறுபடியும் படை திரட்டி வருவார்கள். அதைத் தடுக்கவில்லை இந்த வெற்றி.”

“எதனால்?”

“எனக்கு இப்பொழுது தெரியவில்லை. ஆனால் நமது வெற்றி நிலைக்காது என்று மட்டும் இந்த நிமிஷமே எனக்குப் பட்டுவிட்டது. ராயச்சூர் யுத்தத்திற்குப் பின் அதன் பலனாக மற்றொரு யுத்தம் வரும். இந்த வெற்றியின் தொடர்பாக...” என்று மேலே சொல்லப்போனவர் நிறுத்திக்கொண்டார்.

இல்லை. அவர் நிறுத்தவில்லை. அவர் ஏதோ சொல்லித்தான் இருப்பார். அதற்குள் என் கனவு கலைந்துவிட்டது.

“என்னடா, தூங்கவா இங்கே வந்தாய்? மணி இரண்டாகிறது. எழுந்திரு. பம்பாஸரஸைப் பார்த்துவிடுவோம் இன்று. நாளைக்கு யானை லாயங்கள். சபாமண்டபம் முதலிய சின்னங்களைப் பார்ப்போம்” என்று என் நண்பன் எழுப்பினான்.

ஹம்பி சின்னங்களைப் பார்க்கச் சென்ற முதல் நாளே எங்கள் திகைப்பு மிதமிஞ்சிவிட்டது. விஜயநகரத்தை அவ்வளவு பிரமாதமாக அமைத்த சிறப்பைப்பற்றி அல்ல! இணையற்ற இயற்கை வசதிகள் ஏற்பட்டிருந்த பம்பைக்கரையில் மகத்தான சாம்ராஜ்யம் சூழ்ந்து ஒரு விசித்திர நகரத்தை மயன் சிருஷ்டிபோல, காலமே கண்டு பிரமிக்கும்படியாக நிர்மாணித்த மகா புருஷர்களின் சக்திகூட எங்களுக்கு அவ்வளவு ஆச்சரியத்தை அளிக்கவில்லை. தாளிக்கோட்டை யுத்தத்திற்குப் பிறகு அந்த நிகரற்ற நகரத்தை தரைமட்டமாக்கிய எதிரிகளின் அசுர வெறியையும் உணர்ச்சியின்மையையும் பற்றித்தான்! அவர்களாலும் அவர்களுடைய குரூர ஆவேசத்தாலும் தகர்த்துத்தள்ள முடியாமற்போய் மிஞ்சியதா இப்பொழுது அந்த நகரத்தின் பாழடைந்த கோவில்களும், மண்டபங்களும், அரண்மனைப் பாகங்களுமாக நின்று நமக்கு பலத்தையும் பக்தியையும் ஊட்டுகின்றன!

- 1943

# 11. தனயன்

மதுரைக்கு வெளியே, வைகையின் வடகரையில் விஜயநகர சைனியம் சமுத்திரம் போல ஒருபக்கம் பொங்கிக்கொண்டிருந்தது உயிருடன். அதை எதிர்த்துத் தோல்வியடைந்த மதுரைச் சைனியம் சாவதானமாக கோட்டைக்குள் பின்வாங்கிக்கொண்டிருந்தது. அதன் தலைவர் நாகம நாயகர் கைதியாக எதிரியின் பாசறையில் இருந்தார்.

கட்டுண்ட கிழச்சிங்கம் போல நாகம நாயகர் சோர்வடைந்து ஆசனத்தில் சாய்ந்துகொண்டிருந்தார். சகல விதமான மரியாதைகளும் அவருக்கு நடந்தன. ஆனால், சுற்றிலும் காவல்; அவர் கைதியென்று அவருக்கு அடிக்கடி நினைப்பூட்டிக்கொண்டிருந்தது அந்தக் காவல்.

விசுவநாதன் ஒருவாறாக தன்மனதை திட்டப்படுத்திக்கொண்டு கைதியைச் சந்திக்கப் புறப்பட்டான். மீனாக்ஷி இருந்த திக்கை நோக்கி ஒருதரம் வணங்கிவிட்டு தைரியமாக நாகம நாயகர் இருந்த கூடாரத்திற்குள் நுழைந்தான். அங்கே அவன் கண்ட காட்சி அவனை திடுக்கிடச் செய்துவிட்டது. அவன் தைரியமெல்லாம் எங்கோ போய்விட்டது. அவனை அறியாமல் கண்ணீர் பெருக ஆரம்பித்தது. நரைத்த தலை மயிர் அலங்கோலமாகக் கிடக்க நாகம நாயகர் சிறு குழந்தை போல அழுதுகொண்டிருந்தார். எல்லாத் தீர்மானங்களையும் அடியோடு மறந்து விசுவநாதன் நாகம நாயகரின் காலடியில் விழுந்து கதறினான்.

“தந்தையே! வேண்டாம், கலங்கவேண்டாம். சுத்த வீரரான நீங்கள் இப்படிக் கலங்குவது எதனால்? நான் உங்களையே எதிர்த்து வந்து கைது செய்துவிட்டேன் என்றா? நான் அதைச் சந்தோஷத்துடன் செய்யவில்லை. தந்தையே, என்னை நம்புங்கள். என்னைப்பற்றிக் கெடுதலாக எண்ணாதீர்கள். உங்கள் மகன் நான் என்பதை மறந்துவிட்டேன் என்று நினைக்காதீர்கள். உங்கள் அன்பிற்குப் பாத்திரமான என்னை உங்கள் மனத்திலிருந்து திரஸ்காரம் செய்யாதீர்கள். புகழுக்கோ பதவிக்கோ நான் இதைச் செய்யவில்லை. விஜயநகர சாம்ராஜ்யத்தின் கௌரவத்தை நிலைநிறுத்தவே செய்தேன். இல்லாவிட்டால் உங்களை வெல்ல எனக்கேது பலம்? உங்கள் சௌரியத்தின் முன்பு-“ என்று விசுவநாத நாயகன் தன் மனோதிடம் முழுவதும் இழந்து தந்தை முகத்தைப் பார்த்துக்கொண்டு புலம்பினான்.

நாகம நாயகர் மெதுவாகத் தலையைத் திருப்பி மகனைப் பார்த்து, “குழந்தாய்! உன்னிடம் எனக்கு கோபம் இல்லை. நீ செய்தது சரி.

செய்யாவிட்டால் நீ என் மகன் இல்லையென்று கருதியிருப்பேன். அதற்காக நான் வருந்தவில்லை. விஜயநகர சாம்ராஜ்யத்திற்காக என் உயிரையே அர்ப்பணம் செய்து உழைத்திருக்கிறேன். அது எனக்கு அளிக்கும் மரியாதை இந்தத் தோல்வி! நீ எதிர்த்து வந்தாய் என்பதன்று என் வருத்தம். அச்சுதராயர் என்னை துரோகியென்று எண்ணி என்னை அவமதிக்க நினைத்தாரே அதுதான் என்னைத் துளைக்கிறது!" என்றார்.

***

சந்திரசேகர பாண்டியருடைய நாட்டைச் சோழ ராஜன் படையெடுத்து அபகரித்துக்கொண்டவுடன், தோல்வியுற்ற பாண்டியன் விஜயநகர சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரிடம் சென்று முறையிட்டான். கிருஷ்ணதேவராயர் உடனே தனது கைதேர்ந்த தளபதியான நாகம நாயகரை ஒரு சைனியத்தின் தலைமையில் தெற்கே அனுப்பி, சோழனை அடக்கிப் பாண்டியனுக்கு நாட்டைத் திருப்பி வாங்கிக்கொடுக்கும்படி உத்தரவிட்டார். நாகம நாயகர் தெற்கே வந்து சோழனுடன் போர் தொடுத்து அவனை வென்று சந்திரசேகர பாண்டியனுக்கு மறுபடியும் முடிசூட்டி வைத்தார். ஆனால், பாண்டியனது சக்தியற்ற அரசாட்சியைக்கண்டு தாமே சகல பொறுப்பையும் ஏற்று ராஜ்யத்தை நடத்தினார். மறுபடியும் நாட்டைப் பாண்டியன் கையில் கொடுத்தால் நாடு சீர்குலையும் என்று நேரில் கண்டே அவர் அவ்வாறு செய்தார். அப்படிச் செய்வதற்கு கிருஷ்ணதேவராயரின் அனுமதியையும் பெற்றார்.

அந்த நிலைமை பாண்டியனுக்குப் பிடிக்கவில்லை. சில வருஷங்கள் சும்மா இருந்தான். நாகம நாயகரின் சீர்திருத்தங்களின் கீழ் பாண்டிய நாடு மறுபடியும் பழைய நாட்கள் போல சீரும் செழிப்பும் கொண்டதாக மாறிற்று. மக்கள் நிம்மதியாக இருந்தனர். விவசாயமும் வியாபாரமும் தழைத்தோங்கின. அரசாங்கத்தின் பொக்கிஷம் நிறைந்தது. சந்திரசேகர பாண்டின் தானே ராஜ்யபாரம் செய்யவேண்டுமென்ற ஆவல் அதிகமாகித் துடித்தான். ஆனால், நாகம நாயகரை எதிர்க்க அவனுக்குத் தைரியமில்லை. நாட்டில் அவருக்கு அவ்வளவு செல்வாக்கு இருந்தது. எனவே, மறுபடியும் விஜயநகர அரசனிடம் சென்றான். அப்பொழுது கிருஷ்ணதேவராயர் இறந்து அச்சுதராயர் அரசாண்டு வந்தார். சந்திரசேகரின் முறையீட்டைக் கேட்டு இளம் அரசனின் ஹருதயம் மாறிற்று. உடனே ராஜ்யத்தைச் சந்திரசேகரரிடம் ஒப்புவிக்கும்படி நாயகருக்கு உத்தரவு அனுப்பினார். நாயகர் நாட்டு நிலைமையை எடுத்து விளக்கிக்காட்டி அவ்வாறு செய்வது உசிதமல்லவென்று திருப்பி எழுதிவிட்டார். அச்சுதராயருக்குக் கோபம் வந்துவிட்டது.

உடனே சபை கூட்டி நாகம நாயகரை எதிர்த்துச் சென்று போராடி அவரை அடக்க யார் முன்வருவார்கள் என்று கேட்டார். யாரும் முன்வரவில்லை. நாகம நாயகர் வீரத்தில் எல்லோருக்கும் அவ்வளவு பயம். நாகம நாயகரின் ஒரே மகனான விசுவநாதன் அரச சபையில் இருந்தான். யாருமே எழுந்திருக்காததைக் கண்டதும் அவன் ஆவேசம் கொண்டான். 'விஜயநகர சாம்ராஜ்யத்தில் தைரியமாகப் போருக்குப் போகும் சுத்த வீரன் ஒருவன்கூடவா இல்லை? என்ன கேவலம்? என்ன அவமானம்? கிருஷ்ணதேவராயர் இறந்த சிறிது காலத்திற்குள்ளாகவா ராஜ்யத்தில் இந்தப் பேடித்தனம் தலையெடுத்துவிட்டது?' என்று விசுவநாதன் உள்ளக்கொதிப்பு கொண்டான்.

திடீரென்று அவன் சபையில் எழுந்து நின்றான். "அரசே! நான் சென்று நாகம நாயகரைக் கைதுசெய்து வருகிறேன். உத்தரவு கொடுக்கவேண்டும்!" என்றான்.

அச்சுதராயருக்குத் தூக்கிவாரிப்போட்டுவிட்டது. முதலில் தந்தையும் மகனும் ஏதாவது சதி செய்கிறார்களோ என்று ஒரு கணம் சந்தேகித்தார். மறுக்ஷணம் விசுவநாதனின் வீரம் பொங்கிய விழிகளைப் பார்த்ததும் அவருடைய சந்தேகம் நீங்கிற்று.

"விசுவநாதா, என்ன சொல்லுகிறாய்? உன் தந்தையையே எதிர்த்துச் சென்று கைதுசெய்து வருகிறேன் என்றா சொல்லுகிறாய்?" என்று கேட்டார்.

"ஆமாம், அரசே! என் தந்தை அரசர் ஆணைக்கு உட்படாத கலகக்காரர் இப்பொழுது; நான் அரசரின் சைனியத்தில் போர் வீரன். நான் அவரை சிட்சிக்கவேண்டியதற்குக் கடமைப்பட்டவன்."

"ஒருவேளை உன்னைக் கண்டு அவர் சமாதானமாக என் ஆணைக்கு உட்படலாம். ஆனால், நாகம நாயகர் மகா ரோஷக்காரர், சுத்த வீரர், பிடிவாதக்காரர், ஒரு வேளை உன்னையே எதிர்க்க நிச்சயித்துவிடலாம். அப்பொழுது, அந்தத் தர்மசங்கடத்தில் நீ என்ன செய்வாய்?"

"தர்மசங்கடம் ஒன்றுமே இல்லை. நான் சென்றாலும் சரி, யார் சென்றாலும் சரி, அவர் ஆணைக்கு உட்படாவிட்டால் போர் தொடுக்க வேண்டியதுதானே கடமை?"

"போரில் உன் கையில் அவர் அகப்படாமல் வாளுக்கு இரையாக நிச்சயித்தால்?" என்று கேட்டார் ராயர்.

"அதற்கு நாம் என்ன செய்யக்கூடும்?" என்று உணர்ச்சியற்றவன் போலக் கூறினான் விசுவநாதன்.

“தந்தையைக் கொன்ற தோஷமல்லவா உன்னை வந்தடையும். நாட்டின் மேல் உனக்கிருக்கும் அன்பு வேகத்தில் அதை நீ மறந்துவிட்டாய் போலும்!”

“மறக்கவில்லை. அந்த ஒரு சந்தர்ப்பத்தையும் எதிர்பார்த்தேதான் போகத் துணிகிறேன்.”

“உன் தந்தையையே நீ எதற்காக எதிர்க்கத் துணிந்தாய்?”

“அதை நான் சொல்லவேண்டுமா?”

“அவர் பதவியை நீ அடையலாம் என்று எண்ணுகிறாயா? கியாதிக்காகவா ஆசைப்பட்டு இந்த வேலை செய்யத் துணிந்தாய்?”

“பதவியும் வேண்டாம், கியாதியும் வேண்டாம். கைதியைக் கொண்டுவந்து, உங்கள் முன்னிலையில் நிறுத்தி, விஜயநகர சாம்ராஜ்யத்தின் அதிகாரத்தை நிலைநிறுத்துவதுதான் என் ஆசை. அது என் கடமை!”

“உன் தகப்பனாரை நீ நேரில் கண்டதும் கலங்கிவிடுவாய். தயக்கம் கொண்டுவிடுவாய். காரியம் கெட்டுப்போகும். ஆகையால், நீ போவது உசிதமல்ல.”

“போர் முனையில் எனக்கு எதிரி என் தகப்பனார் என்ற எண்ணமே உதிக்காது என்று இந்த சபையில் உறுதி கூறுகிறேன். தன்னை எதிர்த்து நிற்கும் முகம் யாருடையது என்று வீரன் பார்க்கிறதில்லை!” என்று விசுவநாதன் கூறினான்.

“அப்பா, விசுவநாதா, உன் வீரத்தை நான் மெச்சுகிறேன், ஆனால், நீ போவது சரியன்று.”

“வேறு யாராவது போனால் எனக்கு ஆட்சேபணை இல்லை. நான்தான் போகவேண்டுமென்று நான் சொல்லவில்லை.”

அச்சுதராயர் மறுபடியும் சபையிலிருந்தவர்களைக் கேட்டார். ஒருவராவது முன்வரவில்லை. அச்சுதராயருக்கு அப்பொழுதுதான் சாம்ராஜ்யம் எவ்வளவு பலஹீனம் என்று தெரிந்தது. திடீரென்று திகில் அவரைப் பிடித்துக்கொண்டது.

“அப்பா விசுவநாதா! நீதானடா இப்பொழுது உண்மையில் சாம்ராஜ்யத்தின் நிலைமையைக் காக்க வந்தவன். நான் என்னமோ நினைத்தேன். உன் தந்தையை இதுவரை நம்பியிருந்தேன். அவர் துரோகி”

“இல்லை, அரசே! அவர் துரோகி ஆகமாட்டார். அவர் அனுப்பிய பதிலுக்கு நிச்சயம் சரியான காரணங்கள் இருக்கவேண்டும். நான் துரோகியின் மகன் அல்ல!” என்று சீறினான் விசுவநாதன்.

“உன்னை நான் எப்படி நம்புவது?”

“என் தந்தை ஆணையாகக் கூறுகிறேன். நான் நாட்டிற்கு துரோகம் செய்யமாட்டேன். உங்கள் உத்தரவை நிறைவேற்றிவைப்பேன்!”

“உன் தந்தை தலை நரைத்த போர் வீரராயிற்றே! அவரை எதிர்த்து உன்னால் சமாளிக்கமுடியுமா?”

விசுவநாத நாயகன் மெய்மறந்தான். உரத்த குரலில், “நான் நாகம நாயகரின் புதல்வன் என்பது உண்மையானால், அவரை வென்று கைதியாக்கிக் கொண்டுவருகிறேன். சத்தியம்!” என்று சொல்லிக் கைகூப்பிச் சபையை வணங்கினான்.

சபையே மெய்சிலிர்த்தது. அச்சுதராயர் அந்த வீரத்தைக் கண்டு பிரமித்தார்.

***

“ஆனால், விசுவநாதா! என் தோல்வியால் ஒரு விஷயம் மட்டும் தெளிவாகிவிட்டது. நாயகர்கள் வீரம் இன்னும் போகவில்லை. அவர்களால் இன்னும் தெய்வச் செயல்கள் செய்ய முடியும். நாட்டையே வீடாகக் கருதி அதற்கு உயிரைக் கொடுத்துப் போர் புரிய அவர்களால் முடியும். தேசத்திற்காக எதையும் தியாகம் செய்ய முடியும். குழந்தாய், விஜயநகர சாம்ராஜ்யத்திற்காக நீ பெற்றவன் மீதுள்ள வாஞ்சையையும் தூரத் தள்ளினாய்.”

“வேறென்னதான் இருக்கிறது. இந்த உயிரில் செய்ய? குன்றுபோல உயர்ந்து எந்நாளும் நிலைபெறும் ஒரு செயலைச் செய்யாத ஜன்மம் எதற்கு? விஜயநகர மன்னரின் வலது கையாக இருந்து நீங்கள் ராஜ்யத்தை நிலைநிறுத்தினீர்கள். சிதறிப்போன ஒரு சமூகத்தை மறுபடியும் உலகத்தின் முன் தைரியமாகத் தலையெடுக்கச் செய்தீர்கள். ஹிந்துக்கள் இன்று மறுபடியும் இந்நாட்டு மன்னர்களானார்கள். நம் உயிரைக் கொடுத்து நாயகர்களாகிய நாம் அதை வளர்ப்போமாக! அதற்குப் பராசக்தி மஞ்சம்மாள் அருள்புரிவாளாக!” என்று பரவசம் கொண்டவன் போலக் கொட்டினான் விசுவநாதன்.

திடீரென்று நாகம நாயகர் தலைதூக்கிக்கொண்டு உட்கார்ந்தார். அவர் கண்ணீர் ஆனந்தக்கண்ணீராயிற்று.

“அப்பா குழந்தாய்! நான் தவறு செய்துவிட்டேன், மன்னித்துவிடு. இன்று நான் தோல்வி அடைந்துவிட்டதாக நான் எண்ணியது தவறு. இன்று நான் தோல்வியுறவில்லை. உண்மையாக இன்றுதான் நான் வெற்றியைக் காண்கிறேன். என் வாழ்க்கை இன்று சபலமாயிற்று. தென்னாட்டை அந்நியரிடமிருந்து கைப்பற்றுவது நமது கடமை; தந்தையர் நாட்டை திரும்பிப்பெற்று அதற்குச் சேவை செய்வது நாயகர்களின் உயிர் லட்சியம். அதில் ஓரளவு என் பங்கு கடமையைச் செலுத்தினேன். எனக்குப் பின் நீ பரிபூரணமாக உன் கடமையைச் செய்வாய் என்று இன்று என்னைக் கைது செய்து நீ நிரூபித்துவிட்டாய். இன்று சுகதினம். நீ நீடூழி வாழ்க! நாயகர் வம்சம் ஓங்குக!” என்று கிழவர் எழுந்திருந்து கர்ஜித்தார்.

தந்தையும் மகனும் எழுந்து வெளியே வந்து கரைபுரண்டு போன வைகையாற்றின் வெள்ளத்தைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அதைப்போலவேதானே நாயகர் வம்சமும் என்று யோசித்துக்கொண்டு நின்றார்களோ?

- 1943.

# 12. கவி வேண்டிய பரிசு

பாதுஷா அக்பரும், கவி ஜகன்னாதரும் சொக்கட்டானாடிக்கொண்டிருந்தார்கள்.

அரசனும், கவியும் அவ்விரண்டு ஸ்தானங்களுக்கும் அக்காலத்திற்குரிய சின்னங்கள் போல விளங்கினார்கள்.

- மொகலாய சாம்ராஜ்ய சக்தி ஒரு புறம், ஹிந்து கலைஞான சக்தி மற்றொரு புறம்.

பிற்பகல், அரசியல் அலுவல்கள் தீர்ந்ததும். அமைதியளிக்கும் கலைஞர்களுடைய கலப்பில் பொழுது போக்க பாதுஷா முனைந்தார்.

தர்பாரையடுத்து பாதுஷாவின் அந்தரங்க அறை. விசித்திர வர்ணங்கள் தீட்டிய ரத்ன கம்பள விரிப்பின் மேல் பாதுஷா திண்டு போட்டுச் சாய்ந்துகொண்டிருந்தார். பக்கத்தில் ஸம ஆஸனத்தில் கவி வீற்றிருந்தார். வாசல்கள் போன்ற பெரிய ஜன்னல்களின் வழியாகப் பார்த்தால், டில்லியின் அக்காலத்து எல்லைக்கு மேற்சென்ற பழைய ஹிந்து ராஜதானி இந்திரப்ரஸ்தத்தின் நீண்ட சமவெளி தென்படும். கோடை வெய்யிலின் கனல் போன்ற காற்று, அந்தச் சாளரங்களில் நுழைந்து குளிர்ச்சியடைந்து வீசியது. அறையின் ஒரு கோடியில் கட்டப்பட்டிருந்த ஒரு சிறு செயற்கை ஊற்றிலிருந்து நீர் கிளம்பி, சிறு சிறு திவலைகளாகத் தூவப்பட்டு அக்காற்றை இன்னும் குளிரச் செய்தது. மறைவிடத்திலிருந்து வரும் ஊதுவர்த்தியின் கமழ், அலர்ந்த ரோஜாக்களின் மணத்தில் மிதந்து வந்துகொண்டிருந்தது. பன்னீர் கக்கும் விளாமிச்சவேர் விசிறியால் சேவகன் மெல்ல விசிறிக்கொண்டிருந்தான்.

"ஆமாம், நீர் எந்த ஊரென்று உம்மை இதுவரையில் கேட்கவேயில்லையே நான்?"

"நான் ஆந்திர தேசத்துப் பிராமணன்."

மொகலாய அரண்மனையில் சக்ரவர்த்தியுடன் உட்கார்ந்துகொண்டிருந்த கவியின் எண்ணங்கள் அநேக வருஷங்களைத் தாண்டிப் பின் சென்றன. அவருடைய மனக்கண் முன்பு புராதன ஆந்திரக் கிராமமும், அதன் பாழடைந்த தெருவும், கோடிக் கோவிலும் தோன்றின. அதனுடைய மண்டபத்தில் ஐந்தாறு சிஷ்யர்களுக்குப் பாடம் கற்பித்துக்கொண்டிருந்த ஒரு வறுமையின் உருவம். பிறகு ஒரு பக்கத்து நகரம், அதன் வேத பாடசாலை, வேத

கோஷம், பண்டிதர்களின் வாதக் கூக்குரல், காவியாலங்காரங்களின் ஆராய்ச்சி, இருபத்தைந்து வயது வரை! கலைத்திறமையால், செருக்கடைந்து, பண்டித மனப்பான்மை மேலோங்கி கீர்த்தியின் பொருட்டு அவர் திக்விஜயம் செய்யக் கிளம்பி ஐந்து வருஷங்களாகிவிட்டன. இப்பொழுது சக்கரவர்த்தியின் ஆஸ்தான கவி.

சக்கரவர்த்தி, பகடையில் கவனம் செலுத்திய வண்ணம் "நீர் வடமொழியில் ஏதாவது நூல்கள் இயற்றியிருக்கிறீரா?" என்று கேட்டார்.

"இயற்றியிருக்கிறேன். 'ரஸகங்காதரம்' என்பது என்னுடைய முதல்தர நூல்" என்று சொல்லிக்கொண்டே கவி விளையாடினார்.

"அதன் பொருளென்ன?"

"அது ஓர் இலக்கண நூல். அலங்கார சாஸ்திரம், கவிதை, காவிய நடை முதலியவைகளை என்னுடைய செய்யுள்களைக் கொண்டே விளக்கியிருக்கிறேன்."

"வெற்றி வெறி கொண்டுதானே பாரசீகம் கற்றீர்?"

"அது மட்டுமல்ல காரணம். என் குல தர்மமாகிய ஸனாதனத்திற்கு இந்தக் காஜியாலேற்பட்ட ஆபத்தை நீக்கவே பாரசீகம் கற்றேன்."

"ஆட்டத்தைக்கூட மறக்கும்படியான அவ்வளவு பற்று உமக்கு ஸனாதனத்தில்!" என்று அரசர் சிரித்துக்கொண்டு குத்தலாகக் கேட்டார். ஜகன்னாதருடைய முகம் சிவந்தது. தன் அஜாக்கிரதையை அறிந்து வெட்கமடைந்தார்.

"ஆனால் என் ஆட்சியில், மதத்திற்கு சிக்ஷை கிடையாது. என் கண்களுக்கு முன் எல்லா மதங்களும் ஒன்று. இஸ்லாமுக்கு எவ்வளவு மரியாதை கொடுத்திருக்கிறேனோ. அவ்வளவு மரியாதை இந்து மதத்திற்கும் கொடுத்திருக்கிறேன்."

"நான் அறியேனா என்ன? அதனால்தானே இந்த ஸமஸ்தானத்தில் சேர இசைந்தேன்!"

"என்ன வெய்யில், என்ன வேட்கை! ரொம்ப தாகமாயிருக்கிறது. உமக்கும் ஏதாவது தேவையா தாக சாந்திக்கு?"

"இல்லை, வேண்டாம்."

அக்பரின் அந்தப்புரத்தில் ஜனானா நிர்ப்பந்தம் கிடையாது. அவர் உத்தரவுப்படி அவரது பெண் லவங்கி ஒரு சிறு பொற்செம்பு நிறைய

ஷர்பத் எடுத்துக்கொண்டு வந்தாள். அவள் சரிகை கலந்த ஒரு சிவப்புப் பட்டாடையை, ஹிந்து யுவதி ரீதியில் அணிந்திருந்தாள். இடத்து வழக்கப்படி பின் தலையை முக்காடால் மூடியிருந்தாள். இவைகளின் ஊடு மை தீட்டிய கறுப்பு வரியால் விளக்கப்பட்ட கண்கள் இரண்டு அதிசய மீன்களைப் போல முகவொளியில் துள்ளி விளையாடின. மாதுளையின் சிகப்பையொத்த இதழ்கள் சற்றே பிரிந்து நின்று முத்துப் போன்ற பற்களை அறிவித்தன. யௌவனத்தின் உன்னத அலைபோல் அவள் நடந்து வந்தபொழுது, காலில் அணிந்திருந்த சலங்கைகள் ஒவ்வொரு அடியிலும் ஒலித்தன. அந்தச் சத்தத்தைக் கேட்ட கவி தலை நிமிர்ந்து பார்த்தார். ஒரு கையில் ஷர்பத் நிறைந்த செம்பையும், ஒரு கையில் கிண்ணத்தையும் ஏந்தியபடி பெண் வந்துகொண்டிருந்ததைக் கண்டதும், கவியினுடைய மனதில் ஒரு உவமை தோன்றிற்று. ஆதியில் கடலைக் கடைந்த காலத்தில் ஒரு கையில் அமிர்த கலசத்துடனும், மற்றொரு கையில் விஷ பாண்டத்துடனும் சௌந்தரிய ஸ்வரூபமாகத் தோன்றினாளே மோஹினி! அந்தச் சித்திரம் அவர் ஞாபகத்திற்கு வந்தது.

பானமருந்தியானவுடன் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு அவள் திரும்பிப்போன காட்சியைக் கண்ட க்ஷணமே, கவி தன் உள்ளத்தைக் கொள்ளை கொடுத்துவிட்டார். அவள் யாரென்று அவருக்குத் தெரியாது.

“இவள் யார்? தான் கொண்டுபோகும் கும்பத்தில் உலகத்தாரின் உள்ளங்களனைத்தையும் பிடித்து அடைத்துக்கொண்டு போகிறவள் போலக் காணப்படுகிறாளே!” என்று மதிமயக்கத்துடன் பாதுஷாவைக் கேட்டார்.

பாதுஷா கவியின் உள்ள நெகிழ்ச்சியைக் கவனிக்கவில்லை. அவரது வாயினின்று வந்த கற்பனையின் சாதுர்யத்தில் ஈடுபட்டுவிட்டார்.

“பேஷ் ஜகன்னாதரே! உமது கற்பனை வெகு அழகாக இருக்கிறது. உமக்கென்ன வேண்டும் கேளும்!” என்று குதூஹலத்துடன் கேட்டார்.

கவி மனது கலங்கி ஏங்கியிருந்த அந்த மயக்க வேளையில், அச்சொற்கள் வரங்கேட்கச் சொன்ன அசரீரி போல் தோன்றிற்று.

“இந்தப் பெண்தான் வேண்டும்!” என்று கனவில் சொல்லுவது போலச் சொன்னார்.

“இவள் என்னுடைய பெண்ணாயிற்றே?” என்றார் அக்பர் ஆச்சரியத்துடன்.

அப்பொழுது திடீரென்று கவி முழுத் தீர்மானத்துடன் பேசினார்.

“அவளை நான் மணக்க வேண்டும்.”

இம் மொழிகளைக் கேட்டு அக்பர் குழப்பமடைந்துவிட்டார். குத்தலாகப்பேசி அவருடைய பிரேமையை மாற்றவேண்டுமென்று, “அவள் மிலேச்ச கன்னிகை; நீர் பிராமணன்; உம்முடைய மதம் என்ன ஆவது?” என்றார்.

பண்டிதரின் முகம் சற்று நேரத்திற்குள் அநேக விதமான மாறுதல்களைக் காட்டியது. கண்கள் சாளரத்தின் வழியாக இந்திரப்பிரஸ்த மைதானத்தை நோக்கின. அதே இடத்தில் பஞ்ச பாண்டவர்கள் தர்மம் என்ற ஒரு கொள்கைக்காக— அதற்குக் கட்டுப்பட்டு ஒரு ஸ்திரீயை— தங்கள் பத்னியைக்கூட— கைவிடத் துணிந்தார்கள். அந்தத் தியாக பூமியில் இப்பொழுது இருந்துகொண்டு ஸ்திரீக்காக, யாரோ ஒரு ஸர்வாங்க ஸுந்தரிக்காக, தர்மத்தைக் கைவிடுவதா?...

கவியினுடைய தடுமாற்றத்தை கவனித்த அக்பர் தன் சூழ்ச்சியின் பயனில் சந்தோஷித்து, “என்ன ஜகன்னாதரே, ஜாதிக்குப் பிறகுதானே காதல், அல்லவா?” என்று மேலும் கேட்டார்.

இவ்வார்த்தைகள் சாட்டையடி போல ஜகன்னாதரின் காதில் விழுந்தன.

“இல்லையில்லை. ஜாதி வேற்றுமை நாம் கொண்டது. பிரேமை தெய்வீகம். எனக்கு என்ன வேண்டுமென்று கேட்டீர்களல்லாவா? எனக்கு யானை, குதிரைகள் வேண்டாம், பணமும் பதவியும் வேண்டாம். ஐயனே உமது அருள் வடிவமாகிய இந்த பெண்தான் வேண்டும்!”

தானாகவே வாக்குக் கொடுத்த அக்பர் இன்னது செய்வதென்று அறியாதவராய்த் திகைத்தார். அப்பொழுது அவருக்கு ஒரு யோசனை தோன்றியது.

“பண்டிதரே, என்னுடன் சமபந்தியாக நீர் சாப்பிடுவீரானால் அப்படியே செய்யலாம்!” என்றார் அக்பர்.

பண்டிதர் அந்தப் பிரேரணைக்கு ஒருக்காலும் இணங்கமாட்டாரென்பது பாதுஷாவின் தீர்மானம்.

கவியின் பார்வை மறுபடியும் சாளரத்திற்கு வெளியே சென்றது. அவர் அகஸ்மாத்தாகக் கண்ணெடுத்துப் பார்த்தபொழுது, திரும்பிப் போய்க்கொண்டிருந்த அப்பெண்ணின் கடைக்கண் மேகத்திலிருந்து வீசிய மின்வெட்டு, அவருடைய உள்ளத்தை பளிச்சிட்டது. அர்த்தம் தெரியாமல் வர்ணித்த காட்டுமான்கள் மிரட்சிப் பார்வையின் பூரணப் பொருளும் இப்பொழுதுதான் அவருக்கு விளங்கிற்று. அந்த

மாளிகையின் செயற்கையழகின் பகைப்புலனில், அவளது இளமையின் வனப்பு ஒரு காட்டுக்கொடியின் செழுமையை ஒத்திருந்தது. துஷ்யந்தன் முதன் முதலில் கண்ட சகுந்தலையைப் பற்றி காளிதாஸனின் சித்திரம் அவர் நினைவுக்கு வந்தது. அவளது சிவப்பு ஆடையினிடையே அவள் முகமும், கைகளும், கால்களும் ஒரு ரோஜாவின் வெளிரிய பாகங்கள் போல காணப்பட்டன. உள்ளப் போரில் காவிய உணர்ச்சி வெற்றி பெற்றது. கடைசியில் கவி மெதுவாக அக்பரின் பக்கம் திரும்பினார்.

“அவளுக்காக நான் எதுவும் செய்யத் தயாராயிருக்கிறேன்!” என்று சாவதானமாகச் சொன்னார்.

கவி முகத்தில் ஒரு பூர்ண, வெற்றியின் சோபை ததும்பியது.

- தினமணி - வருஷமலர், 1936

# 13. வீழ்ச்சி

அவராகச் சரண் புகுந்த அந்தக் காடு அவருக்கு ஒரு கூடாகப் போய்விட்டது.

பிரதாப் சிங் கூட்டில் அடைபட்ட சிங்கம் போல அதில் இங்கும் அங்குமாக இடைவிடாமல் நடந்துகொண்டிருந்தார். வெறி பிடித்தது போன்ற அந்த நடையே அவர் மனம் முற்றும் வேறு எதிலோ ஆழ்ந்திருந்ததென்பதை விளக்கிற்று.

இருட்டிக் கொஞ்ச நேரம் ஆகிவிட்டது. ஜகமே வாயடைபட்டது போல திடீரென்று மௌனமாகிவிட்டது. சுவர்க்கோழிகள் மட்டும்தான் இடைவிடாமல் கத்திக்கொண்டிருந்தன. தூரத்திலிருந்த ஆரவல்லி மலைகளின் சாரல் சதுப்புகளிலிருந்து கிளம்பிய 'கொள்ளிவாய்ப் பிசாசுகள்' மட்டும் தோன்றித் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. நடுநடுவே ஏதாவதொரு காட்டு மிருகம் அலறிய ஒலி கிளம்பிக் கொஞ்சம் கொஞ்சமாகக் காட்டின் மௌனத்தில் கலந்தது.

அந்த அமைதியும் தனிமையும் ராணாவிற்கு இன்னும் அதிகமாக வெறியூட்டின. அந்த இருளின் வெறிப்பில், அவருடைய வீழ்ச்சி ஒரு பேயுருவம் போல வந்து அவரை ஏளனம் செய்தது போலிருந்தது. யானையின் வெறியை அங்குசம் அதிகப்படுத்துவது போல அந்தக் காட்டு வாழ்க்கையின் கட்டுப்பாடு அவருடைய ஆக்ரோஷத்தை அதிகப்படுத்திற்று. மாதாவை உபாஸனை செய்யவேண்டிய அன்று என்னமோ ராணா பிரதாப சிங்கின் கோபம் கொந்தளித்து எழுந்தது. ராணி துர்க்காகூட அவர் அருகில் போக யோசித்தாள்.

ராஜபுத்திர குலம் வீழ்ச்சியடைந்த விபரீதத்தை எண்ண எண்ண மேவார் அரசன் மனது கலங்கிற்று. ஈன ஜாதியினர் போல் ராஜபுத்திரர்கள் மொகலாயருக்குத் தலைவணங்கிப் பணிந்து போகும் காலமா வந்துவிட்டது? ராஜஸ்தானத்தின் மானத்தை அன்னாள்வரை, பெண்டு பிள்ளைகளையும் லட்சியம் செய்யாமல், உயிர் கொடுத்துக் காத்த சிங்கங்கள் நரிகளாகிவிட்டனவா? எங்கிருந்தோ நேற்று ஹிந்துஸ்தானத்தில் வந்து நுழைந்த அன்னியனுக்கு ஆளாகி அவர்களிடம் உத்தியோகம் பெறும் துரோகிகளாக ராஜபுத்திரர்கள் மாறிய விந்தைதான் என்ன? அவர்களுடைய குலத்தைக் குன்றின்மேல் விளக்காகத் தூக்கி வைத்த அவர்களுடை அஞ்சா நெஞ்சமும் சுயமரியாதையும் எங்கே போய்விட்டன? மொகலாயரை எதிர்த்துப் போராட அவர்களுக்கு இப்பொழுது ஏன் வலுவில்லாமல்

போய்விட்டது? தேவி மாதாவின் அருள் குன்றிவிட்டதா?... இல்லை! தேவி மறக்கமாட்டாள்!

ராஜபுத்திரர்கள்தான் தங்களுடைய கடமையை மறந்தார்கள். தியாக புத்தியைப் பறிகொடுத்துவிட்டார்கள். டாம்பீகத்தில் ஈடுபட்டு வலிமையை விற்றுவிட்டார்கள்... ஆம்! சந்தேகமில்லை... பரஸ்பர அசூயையாலும் சில்லறை மனஸ்தாபங்களாலும் ஒற்றுமையில்லாமையாலும் அவர்களிடையே ஐகபத்தியம் போய்விட்டது. சுகவாழ்க்கையால் ஏற்பட்ட தளர்ச்சியும் சேர்ந்துகொண்டு ராஜபுதனத்தைச் சீர்குலைத்துவிட்டது! ஓரிருவர் தனிப்பட்டு நின்று என்ன பயன்? அவர்களுடைய எதிர்ப்பு எவ்வளவு பலமாயிருந்தாலென்ன? மொகலாயர்களின் சைனியம் சுலபமாக அவர்களை ஒடுக்கிவிட்டது.

ஆனால் பிரதாப் சிங் மட்டும் அக்பர் பாதுஷாவிற்கு முடிசாய்க்க மறுத்துவிட்டார். அன்னியனுக்கு அடிமையாகாத ஒரு ராஜபுத்திரனாவது இருக்கவேண்டுமென்றுதான் அவருக்குப் பணிவதில்லையென்று கங்கணம் கட்டிக்கொண்டார். அந்தத் தீர்மானத்திற்காகத் தீக்ஷை வளர்த்தார். ராஜபுதனம் மறுபடியும் சுயேச்சை பெற்று, ராஜபுத்திரர்கள் பெயர் மறுபடியும் களங்கமற்று ஓங்கும் வரையில் படுக்கையில் படுப்பதில்லையென்றும், சுவர்ண பாத்திரத்தில் சாப்பிடுவதில்லையென்றும் விரதம் பூண்டார். ஒரு ராஜபுத்திரன் ராஜ ஸ்தானத்தில் இல்லாமற் போகவில்லை. சித்தூர் வம்சத்தில் இன்னும் ராணா பிரதாப் உயிருடன் இருந்தார்! சித்தூர் போய்விட்டது. ஆனால் ராஜபுத்திர வீரம் ஒரு அமரஜோதி; மேவாரும் போகலாம். எந்நாளும் அன்னியனுக்குப் படியாத ஒரு ராஜபுத்திரன் இருப்பார்!

மேவார் அக்பர் வசமாகிவிட்டால் என்ன? மேவார் மன்னன் அக்பர் வசமாகவில்லை. ராஜ்யத்தை விட்டு வெளியேறி அடுத்த காட்டில் புலி போலப் பதுங்கியிருந்தான். சில சமயங்களில் அப்படிப் பதுங்கியிருந்ததே அவருக்கு மகா கஷ்டமாயிருந்தது.

பிரதாப் சிங்கின் ரத்தம் கொதித்தது. அம்பர வம்சத்தைச் சேர்ந்த மான் சிங்!— மொகலாயரின் மைத்துனன்! தன் தங்கையை—அடாடா!— ஜோத்பாயை தான் பதவி பெறும் பொருட்டு விற்றான் பாவி!

‘ஆனால் அவனைச் சொல்லுவானேன்? நான் ஏன் ராஜ்யத்தை விட்டு இங்கே வந்திருக்கிறேன்? மொகலாயருடன் யுத்தம் புரிந்து போர்க்களத்தில் உயிர் துறந்திருக்க வேண்டியவன், பேடி போல, இங்கு ஏன் வந்து குடும்பத்தை நடத்திக்கொண்டிருக்கிறேன்? குடும்பம்,

பெண்சாதி, குழந்தைகள் என்ற பிரமை. அவைகளல்லவா என்னை இப்படிச் செய்துவிட்டன? என் குடும்பத்தைக் காத்து என் மானத்தை இழந்தேன்... சை!...'

'என் மானமா! ராஜஸ்தானத்தின் மானம்! ராஜபுத்திர குலத்தின் மானம்! பிருதிவிராஜன் சொன்னது சரி! நான்தான் இப்பொழுது ராஜபுதனத்தைக் காக்கவேண்டியவன். நான் இப்படி இங்கே குடும்பப் பிரேமையில் உழன்றுகொண்டிருந்தால் ராஜபுத்திர சரித்திரமல்லவா அதோகதியாகிவிடும்! என் எண்ணமோ, என் குடும்ப நினைவோ இப்பொழுது எனக்கேற்பட்டால் நான் கடைசி துரோகியாவேன்!'

"பவானி ஆணை! நான் அவள் அடி பணிகிறேன். அவள் என்னை மீட்பாளாக! இந்தக் குடும்ப வாஞ்சையிலிருந்து என்னை விடுவிப்பாளாக! ஜயமாதா!"

பிரதாப் வெறி பிடித்தவன் போல் உரக்கக் கத்தினார். அந்தக் காட்டின் ஆழ்ந்த நிசப்தத்தில் அவர் குரல் சிம்ஹநாதம் போலக் கிளம்பிற்று.

துர்க்கா அதைக்கேட்டு திகிலடைந்து போனாள். குழந்தைகளுக்கு ஆகாரம் கொடுத்துக்கொண்டிருந்தவள் அதை அப்படியே வைத்துவிட்டு ஓடி வந்தாள். குழந்தைகளைத் தனியாக விட்டுவிட்டு வருகிறோமே என்ற நினைப்புகூட அவளுக்கு வரவில்லை. பிரதாப் சிங்கின் குணம் அவளுக்கு நன்றாய்த் தெரியும். அவர் அந்த மாதிரி நடந்துகொண்டால் ஏதோ மகத்தான நிகழ்ச்சிதான் என்று தெரியும்.

"பிரபோ! ஏன் ஆயாசப்படுகிறீர்கள்? எதற்கும் காலம் சரியாக வேண்டும். காலபலம் சரியாக இல்லை. காலம் மாறும்" என்று மெதுவாக ஜாக்கிரதையாக முகக்குறிப்பை உற்றுக் கவனித்துக்கொண்டே ஆரம்பித்தாள். ராணா நடப்பதை நிறுத்திவிட்டு ஓரிடத்தில் நின்றுகொண்டு துர்க்காவை தலைசாய்த்த வண்ணம் கவனித்தார்.

"பாண்டவர்களே காலம் மாறுமென்று காட்டில் காலங்கழிக்கவில்லையா? ஆனால்—ஆனால், இன்று நமது வறுமைதான் தாங்க முடியாததாக இருக்கிறது. நாம் அதை இலட்சியம் செய்யவில்லை— நாம் படும் பாட்டைப் பற்றிக் கவலையே இல்லை. குழந்தைகள்தான் ஏமாறுகிறார்கள். வாழ்க்கையின் விபரீதமான ஏற்றத்தாழ்வுகளை அறியாத பருவம் அல்லவா? நமது நிலைமை அவர்களுக்கு அர்த்தமாகவில்லை. எப்படி ஆகும்? கண் கண்டு அனுபவித்த ராஜபோகம் ஒரு கனவுபோல மறைந்துவிட்டால் பாவம்! அவர்கள் சவலைப் பிள்ளைகள் போல ஏக்கம் கொண்டு குன்றுகிறார்கள்!"

“ஹும்!” என்று ராணா கர்ஜித்தார். அது துக்கத்தால் ஏற்பட்ட பெருமூச்சா அல்லது கோபக்குறியா என்று துர்க்காவால் ஊகிக்க முடியவில்லை.

“குழந்தைகள் நமது சோகம் கவிழ்ந்த முகங்களைக் கண்டு பீதியடைந்து மௌனமாகிறார்கள்! அவர்களுடைய திகைப்பைப் காண என்னால் சகிக்க முடியவில்லை. நமக்குத் தெரிகிறது நமது லட்சியத்தின் மேன்மையும் வீரத்தின் கௌரவமும்—நாம் குழந்தைகளல்ல. ஆனால் அவர்கள் அக்ஞானிகள்! இருக்கட்டும் — ஈசுவரன் — தேவி — கைவிடமாட்டார். தைரியம்கூட நம்மைக் கைவிடாது!”

“சீ, போ, அந்தப்புரம்! யார் உன் வேதாந்ததைக் கேட்டது? உன்னாலல்லவா நான் மானத்தை இழந்தேன்! உனக்காவது, — நீ ராஜபுத்திர ஸ்திரீ! — மானம் இருந்தால் என்னை அன்றே யுத்தகளத்திற்கு அனுப்பியிருப்பாய்... உன்னைச் சொல்லுவதில் என்ன பயன்? என் மதியல்லவா மங்கிப்போய்விட்டது! உன்னையும் உன் குழந்தைகளையும் காப்பாற்ற, இந்த ஈன வாழ்வு வாழச்செய்ய, மானத்தை விற்றுவிட்டேனே! அடாடா!”

ராணாவின் குரலில் கோபம் தணிந்து பச்சாத்தாபமும் துக்கமும் அதிகமாயிற்று. துர்க்கா கொஞ்சம் தைரியமடைந்து ராணாவின் மனதை மெதுவாக சமாதானப்படுத்துவதற்கு ஆரம்பித்தாள்.

“ராஜபுத்திர வீரன் இந்த மாதிரி ஏங்குவது வழக்கமில்லை. காலத்திற்கு விட்டுக்கொடுக்க வேண்டியது வீரத்திற்குக்கூட ரொம்ப அவசியம். ஆயிரம் பேருக்கு முன்னால் இருவர் போய் கண்மூடித்தனமாய் விழுவதும் பேதமை. புலி பாய்வதற்காகத்தான் பதுங்கும். அது பயப்படுவதன்று, ஒளிவதன்று.”

“உனக்கெப்படித் தெரியும் ஒரு வீரன் மனத்து வேதனை? என்னவானாலும், ராஜபுத்திர குலமானாலும் நீ பெண்—” துர்க்கா சட்டென்று கோபமடைந்தாள்.

“நான் மேவார் ராணி!” என்றாள் கர்வத்துடன்.

“இல்லையென்றுதான் நிரூபித்துவிட்டாயே! வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? வீரனுக்கு முன்பின் யோசனையே கிடையாது — கூடாது! எந்த நிமிஷம் யோசனை செய்ய ஆரம்பிக்கிறானோ அந்த நிமிஷம் முதல் அவன் வீரனல்ல, பயங்கொள்ளி!”

“சித்தூர் வம்சத்தில் பயங்கொள்ளிகள் கிடையாது. என் கையைப் பிடித்த பிரதாப் சிங் பயங்கொள்ளி அன்று!” என்று துர்க்கா மெய்மறந்து

பேசினாள்.

நக்ஷத்திரங்கள் நிறைந்த அந்தக் கிருஷ்ண பக்ஷ இரவில் மேவார் ராணாவின் முகம், மற்றோர் நக்ஷத்திரம் போல ஜொலித்தது.

அருகிலிருந்த குடிசைக்கு வெளியே ஒரு சிறு விளக்கின் வெளிச்சத்தில் குழந்தைகள் இருவர் முன்பும் புல்லரிசியிலிருந்து செய்யப்பட்ட மா ரொட்டி வைக்கப்பட்டிருந்தது. அப்பொழுதுதான் அவர்கள் அதை சாப்பிட ஆரம்பித்த சமயம். திடீரென்று ஒரு காட்டுப்பூனை அவர்களுக்கு நடுவில் பாய்ந்து ரொட்டியைக் கவ்விக்கொண்டு ஓடிப்போய்விட்டது.

சத்தத்தைக் கேட்டு துர்க்கா வேகமாகப் போய்ப் பார்த்தாள். அங்கே அவள் கண்டது அவளுடைய வீரநெஞ்சைக் கலக்கிவிட்டது.

காலத்தின் கொடுமை ஓரளவில் நிற்கக்கூடாதா? இரவு உணவிற்கு மிஞ்சியிருந்த அற்ப ஆகாரத்தைக் கூடவா அபகரித்துக்கொண்டு போகவேண்டும்? பட்டினியைக் கூடவா இன்னதென்று அறியவேண்டும் அவள் குழந்தைகள்? அவள் மனம் இடிந்தது. நள தமயந்திகள் நினைவு வந்தது. போதாத காலத்தில் ஒற்றைத் துணியைப் பக்ஷி கொண்டுபோகவில்லையா? தன்னையறியாமல் வாய்விட்டு அலறினாள். அந்த சோகத்தின் தவிப்பை அவளால் தாங்க முடியவில்லை.

துர்க்கா அழுத குரலைக் கேட்டு ராணா திடுக்கிட்டார். ‘துர்க்கா அழுதாளா?... என்ன விபரீதம்? இன்று என்ன நேரப்போகிறது?’ என்று நினைத்துக்கொண்டே அவளிருக்கும் இடத்திற்குச் சென்றார்.

துர்க்காவின் துக்கம் ராணாவைக் கண்டதும் மிதமிஞ்சிப் போய்விட்டது. ஓடி வந்து ராணாவின் காலில் விழுந்து கதறினாள்.

“துர்க்கா, துர்க்கா, என்ன?” என்றார் ராணா. அவர் தன் கோபத்தையே மறந்தார்.

“என்னையும் கொன்று குழந்தைகளையும் கொன்றுவிடுங்கள். நீங்கள் அக்பரை எதிர்த்துச் செல்லுங்கள்! இந்த வாழ்வு இனிமேல் வாழ முடியாது! வேண்டாம்! வேண்டாம்! நானே நெருப்பில் பிரவேசித்துவிடுகிறேன். அதுதான் ஹிதம்!”

“என்ன நடந்தது?” என்று கேட்ட பொழுது ராணாவின் குரலில் அமைதியும் தீர்மானமும் தோன்றிவிட்டன.

“இரவு உணவிற்கு விதியில்லாமல் வாழலாமா”

“நாம்தான் உபவாசமாயிற்றே?”

“குழந்தைகள்?”

“குழந்தைகளுக்கு அமர் கொண்டுவந்த ரொட்டிகள்?”

“கொஞ்சம்தான் பாக்கியிருந்தது. அதை அவர்கள் முன் வைத்துவிட்டு உங்களிடம் வந்தேன். அப்பொழுது காட்டுப்பூனையொன்று அதை எடுத்துக்கொண்டு போய்விட்டது.”

“குழந்தைகள் பட்டினியா?” என்று கேட்டுவிட்டு ராணா அப்படியே அசைவற்று நின்றுபோனார். கொஞ்ச நேரம் அவர் ஒன்றுமே பேசவில்லை.

பிறகு திடீரென்று “அமர்!” என்று கர்ஜித்தார்.

எல்லோரும் நடுங்கிப்போய்விட்டார்கள். அந்தக் குரலைக் கேட்டு, அமர் தூரத்திலிருந்து ஓடிவந்தான்.

“பிரதாப் பணிந்துவிட்டான்; சமாதானத்திற்குத் தயார் என்று அக்பரிடம் தெரிவி, போ, நிற்காதே இங்கே.... ஓடு!” என்று சொல்லிவிட்டு மகா ராணா தொப்பென்று பூமியில் உட்கார்ந்தார்.

“துர்க்கா! ராஜபுத்திர ஜாதி நசித்துவிட்டது. உளுத்துப்போன மூங்கிலாகிவிட்டது. நாம் அரண்மனைக்குத் திரும்புவோம், வா. காடும் பசியும் கஷ்டமாக இருக்கின்றன. தியாகம் செய்ய உள்ளே சக்தி இல்லை!... துர்க்கா!... க்ஷத்திரிய குல வித்தை அன்று பரசுராமன் அழித்ததென்பது கதை. இன்று அது பூண்டற்றுப்போய்விட்டது. கோழைத்தனம்தான் உண்மையான சத்ரு—அக்பரைக் காட்டிலும் அதிக பலம் கொண்டது.”

“இல்லை, இன்றும் நாம் தலையெடுக்கலாம்” என்றாள் துர்க்கா.

“முடியாது. இதுதான் பரீக்ஷை. அதற்கென்ன நாளைக்குத் திரும்பவும் சுயபுத்தி வந்து திரும்பவும் அக்பரை நிராகரிக்கலாம். ஆனால் மறுபடியும் சோர்வு வரும். ஆகா! அக்பர் சாமர்த்தியசாலிதான்! குலைக்க முடியாத ராஜபுத்திர வீரியத்தை எவ்வளவு வகைகளில் இடத்திற்கேற்றவாறு குலைத்துவிட்டான்?...”

“சரி, ராஜஸ்தானத்தின் சரித்திரம் முடிவடைந்துவிட்டது. இனி தூங்கலாம் வா!”

- 1943

## 14. தியாக விக்ரகம்

ஜோத்பாய் மஞ்சத்தில் குப்புறப் படுத்தவள் எழுந்திருக்கவில்லை. தாதி கொண்டுவந்து வைத்த அன்ன பானங்கள் அப்படியே இருந்தன.

நிலவு பட்டப்பகல் போலக் காய்ந்துகொண்டிருந்தது. அறையின் பெரிய ஜன்னல் வழியாக நிலா உள்ளேயும் பால் கொட்டினது போலத் தரையில் விழுந்திருந்தது. வெண்மையான படுக்கையின் மேல் ஜோத்பாய் ஒரு துவண்ட புஷ்பம் போலக் குவிந்து கிடந்தாள். அறையின் அகண்ட விளக்குகளின் வெளிச்சம் அவளுடைய புடவையின் ஜிகினாவில் பட்டு மின்னிக்கொண்டிருந்தது. அவள் மூச்சுவிட்டபோது புடவை அசங்கியதால் பிரதிபலிப்பு மங்கியும் ஓங்கியும் தெரிந்தது.

மான் சிங் மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்தான். உள்ளே நுழைந்ததும் கதவை ஜாக்கிரதையாக மூடிவிட்டு மஞ்சத்தில் மெய்ம்மறந்து கிடந்த சகோதரியைச் சற்று நேரம் மௌனமாகக் கவனித்தான். பிறகு தலைகுனிந்த வண்ணம் அறையில் மேலும் கீழுமாக உலாத்தினான்.

சகோதர வாஞ்சையும் கடமையும் அவன் மனதில் கைகலந்துகொண்டிருந்தன. மிகுந்த மனோதிடத்துடன் கடமையைக் கடைப்பிடித்தான். சகோதரியின் சுகத்திற்காகவும் அவள் கஷ்டப்படக்கூடாது என்ற தன் மனோபீஷ்டத்திற்காகவும் தான் அவசியம் என்று கருதிய பாதையைக் கைவிட்டுவிடக்கூடாது என்று முடிவிற்கு வந்துவிட்டான்.

அவன் கடமையென்று எண்ணின காரியம், அவன் காலத்து முக்கியமான தேசீயப் பிரச்சினையை ஒட்டியது.

ராஜபுத்திர குலம் வெறும் வீரத்தைக் காட்டி, மொகலாய வாளின் கீழ் வீழ்ந்து மடிந்து நசிந்துப்போவதா? அல்லது ராஜதந்திர முறையில் நடந்துகொண்டு காலபலத்தை அனுசரித்து, அதன் வெள்ளப்போக்கில் கொஞ்ச தூரம் சென்று பிறகு கரையேறுவதா? இதுதான் அக்பர் பாதுஷாவின் காலத்தில் ராஜபுத்திரர்கள் முன் நின்ற பிரச்சினை.

அக்பர் வம்சம் ராஜபுதனத்தின் கௌரவ சிகரங்களில் ஒன்று. மான் சிங் அந்த வீரகுலத்தில் உதித்தவன். சுத்த வீரன்; ஆனால் ராஜதந்திரி. டில்லியில் சாம்ராஜ்யாதிபதியாக இருந்த அக்பர் பாதுஷாவின் செல்வாக்கையும் பலத்தையும் திறமையையும் நன்றாய் மதிப்பிட்டு

அறிந்தவன். அக்பரை சில ஆயிரம் ராஜபுத்திரர்கள் எதிர்த்து வெற்றி பெறுவதென்பது நடக்கக்கூடாத காரியம். ஆகையால் அவர்கள் அந்த சமயம் வீரத்தை முன்னிட்டு மாயாமல், சமரஸமாக, நிலைமையைச் சமாளித்துப் பிறகு தலையெடுக்க முயலவேண்டுமென்பது மான் சிங்கின் கருத்து.

மேலும் முற்போக்கையும் எதிர்காலத்து க்ஷேமத்தையும் உத்தேசித்து அடிக்கடி சில சமூக மாறுதல்களையும் காலத்திற்கேற்ற புதுப்பழக்கங்களையும் கட்டாயமாக அனுசரிக்க வேண்டுமென்பது அவன் கொள்கை. அவன் யோசித்து யோசித்துப் பார்த்ததில் வேறு வழி ஒன்றுமே அவனுக்குப் புலப்படவில்லை. மொகலாயருடன் ராஜபுத்திரர்கள் ராஜி செய்துகொள்ளவேண்டியது மிகவும் அவசியம் என்றுதான் அவனுக்குப் பட்டது. ராஜபுதனத்தின் சரித்திரத்தில்—ஏன் ஹிந்துஸ்தானத்தின் சரித்திரத்திலேயே, அந்த சமயம் ஒரு மகத்தான சோதனைக்காலம் என்று அவனுக்குத் தோன்றியது.

சித்தூர் வம்சத்தின் வீர ராணாவான பிரதாப் சிங் இதற்கு நேர் எதிரிடையான மனப்பான்மை கொண்டிருந்தார். ராஜபுத்திர குலம் அன்றே அழிந்தாலும் சரி, மானத்தை விட்டுக்கொடுக்கக்கூடாதென்பது அவருடைய தீர்மானமான கொள்கை. அன்னியனுடன் சமாதானம் செய்துகொண்டு பழகுவது நாட்டைக் காட்டிக்கொடுக்கும் துரோகி வேலை என்பது அவரது சித்தாந்தம். ராஜபுத்திரன் என்றும் தூய்மை ரத்தம் கொண்டவனாக இருக்கவேண்டும். சலிப்படைந்து வாழ்வதைக் காட்டிலும் சாவது மேல் என்று திட மனதுடன் அக்பரை எதிர்த்து நின்று போராடினார்.

மான் சிங் அப்படி எண்ணவில்லையென்று பிரதாப் சிங் அவனிடம் தீராப் பகைமையுணர்ச்சி கொண்டார்.

மான் சிங் மெதுவாகத் தங்கையின் அருகில் சென்று அவள் தலைமயிரை மெள்ளத் தடவினான். ஜோத்பாய் உலுக்கி விழுந்தாள். திடீரென்று படுக்கையைவிட்டு எழுந்து உட்கார்ந்தாள். அவளுடைய வகிடு கலைந்து முகம் வெடித்தது போல் இருந்தது. நெற்றிக் குங்குமம் அழிந்துபோய் சோபையற்றுப் போயிருந்தாள். சற்று குலைவுற்ற ஆடையைக்கூட அவள் சரிப்படுத்திக்கொள்ள மறந்தாள். கண்களில் ஒரு பயந்த பார்வையும் நிலைகாணக்கூடாத சோகமும் இருந்தன.

“அண்ணா, அண்ணா, என்னைக் கொன்றுவிடு. உனக்குத் தங்கை இல்லையென்று நினைத்துக்கொள்!” என்று சொல்லி விம்மினாள்.

“கண்மணி, உன்னை நான் எவ்வளவு சிரமப்பட்டுப் படிக்க வைத்தேன்?

உன்னை எல்லாம் தெரிந்தவளாக்கினேன்—என் சிரமமெல்லாம் வீணா?" என்று மான் சிங் சொன்ன பொழுது அவனுடைய வீரக்குரலே கம்மிப்போய்விட்டது.

"எதற்காகச் சொல்லிக்கொடுத்தாய்? நீ சொல்லுவதையெல்லாம் நான் செய்யவேண்டும் என்பதற்காகவா?" என்று ஜோத்பாய் குறுக்கிட்டுக் கேட்டாள்.

"நான் சொல்லுவதையெல்லாம் நீ எனக்காகச் செய்யவேண்டுமென்று நான் சொல்லவில்லையம்மா! தேசத்திற்காகச் செய்! வருங்காலத்தை உத்தேசித்துச் செய்! நீ புத்திசாலி, ஆலோசனை செய்துபார்க்கத்தான் உனக்கு அவகாசம் கொடுத்திருக்கிறேனே! எனக்காகக் கட்டாயமாக நீ ஒன்றும் செய்யவேண்டாம். அது பிரயோஜனமுமில்லை. ஆனால் நான் ஒன்று மட்டும் உனக்குச் சொல்ல விரும்புகிறேன். நான் சொல்லுவது என்னுடைய சுயநலத்தை உத்தேசித்து அன்று என்பது உனக்கே தெரியலாம். பவானி முன்பு ஆணையிட்டுக் கூறுகிறேன்!" என்று மான் சிங் விர்ரென்று அறையின் ஒரு பக்கத்துச் சுவரில் தொங்கவிடப்பட்டிருந்த பெரிய சித்திரத்தின் அடியில் போய் மண்டியிட்டுக்கொண்டு கைகூப்பினான். அது ராஜபுத்திரர்களின் குல தேவதையான பவானியின் படம். அவள் துர்க்கை அவசரத்தில் திரிசூலம் கையில் ஏந்தி நின்றாள். பக்கத்தில் அவள் வாகனமாகிய சிம்ஹம் படுத்திருந்தது.

ஜோத்பாயும் ஒருதரம் பவானியைத் தலைதூக்கிப் பார்த்தாள். "பின் எதற்காக என்னை உயிருடன் மொகலாயனுக்குப் பலியிட உத்தேசிக்கிறாய்?" என்று நீர் நிறைந்த கண்களை அவன் பக்கம் திருப்பிக் கேட்டாள். அவள் தோற்றத்தில் வேட்டையாடப்பட்ட ஒரு மிருகத்தின் மிரட்சியும் பீதியும் இருந்தன.

மான் சிங் எழுந்து நின்றான்.

"ஜோத்பாய்! நமது சரித்திரத்தின் இந்த நெருக்கடியான நிலையில், 'நான்', 'நீ' என்ற எண்ணமே உண்மையான ராஜபுத்திரர்களிடையே உதிக்கக்கூடாது. நீ சொல்லுவது போல நான் உன்னை பலியிடத் துணிந்தேனானால் எப்பேர்ப்பட்ட மனத்துடிப்புடன் அதை நான் செய்யப் புகுவேன் என்பது உனக்குத் தெரியாதா?"

"ஆகையால்தான் நான் சொல்லுகிறேன், அண்ணா! நீ என்னை உன் உயிரைவிட அதிகமாக மதிக்கிறாய் என்று எனக்குத் தெரியும். ஆகையால் — மான்! — உன் கையாலேயே, என்னைக் கிளி போல வளர்த்து, உன் கையாலேயே என்னை மொகலாய மன்னனிடம்

கொடுத்து, அவன் என்னைத் தொட்டுக் கொல்லுவதைப் பார்த்து நீ மனம் உடையக்கூடாது! நீ அந்த விபத்தைத் தாங்கமாட்டாய். இந்தா, உன் கைவாளாலேயே என்னைக் கொலை செய்து மன அமைதி கொள்!" என்று அவள் கைநீட்டி மான் சிங்கின் இடையில் தொங்கிய வாளை உருவி அவன் கையில் கொடுத்தாள். அவன் அதை உயிரற்ற கையில் வாங்கிக்கொண்டான்.

"ஜோத்பாய்! என் கருத்தை, இந்த விஷயத்தில், உன்னால் அறிய முடியவில்லையா?" என்று இரங்கிக் கேட்டான்.

"என்ன கருத்து? குலமானத்தைக் குலைப்பது ஒரு கருத்தா? ஐயோ! உனக்கேன் இந்தப் புத்தி வந்தது? பிரதாப் சிங்! அவனுடன் நான் பிறந்திருக்கலாகாதா? ஆ! மான் சிங்! இல்லை, இல்லை. உன்னுடன் பிறந்ததுதான் என் பாக்கியம்! ஆனால், உன் தங்கையின் வாழ்க்கையை இப்படிச் சிதைக்க நீ எப்படித் துணிந்தாய்?" என்று ஜோத்பாய் மான் சிங்கின் தோளில் கைவைத்துக் கேட்டாள்.

மான்சிங் ஜன்னல் வழியாக தூரத்து வெளியைப் பார்த்துக்கொண்டு கம்பீரமாகப் பேசலானான்.

"தேசத்தைக் காக்கும் பெரிய காரியத்தில் தனிமனிதர்களின் சுக துக்கங்களைப் பற்றி எண்ணுவதற்கே இடமில்லை—சாவகாசம் கிடையாது! மொகலாயர் ஹிந்துஸ்தானத்தில் வேரோடிவிட்டார்கள். இனிமேல் அவர்களை இங்கிருந்து யாராலும் பெயர்க்க முடியாது. அவர்களுடைய ஆதிக்கம் நாளுக்கு நாள் பெருத்து விரிந்து வருகிறது. நம் கண்முன்னேயே சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்துவிட்டார்கள். இனி, ஹிந்து மன்னர்கள் தனியாக எதிர்த்து நின்று போராடுவது பயனற்ற காரியம். இன்றே நாம் நிலைமையை உணர்ந்து அவர்களை இந்த தேசத்து மக்களாக ஏற்று அவர்களுடன் கலந்துகொண்டால் ஹிந்து மதம் நிலைக்கும்—ஹிந்துஸ்தானம் சீர்பெறும்."

"நான் மொகலாயனுக்கு வாழ்க்கைப்படுவதனாலா?"

"உன் மகன் சாம்ராஜ்யாதிபதி ஆவான்!"

ஜோத்பாய் காதுகளைப் பொத்திக்கொண்டாள். அடிபட்ட பட்சி போலக் கத்தினாள்.

"மான்சிங், மான்சிங்! நான் ஒருநாளும் அக்பரின் மனைவியாகமாட்டேன்!"

"அக்பரின் மைத்துனனாக வேண்டுமென்று நான்தான் ஏங்கிக்

திரிகிறேன் என்று நினைக்கிறாயா?” என்று மான் சிங் சிறிது கடுகடுப்புடன் கேட்டான். அவன் கண்கள் ஒரு நிமிஷம் ஜொலித்தன. மறு நிமிஷம் அவன் சடக்கென்று உணர்ச்சி வேகத்தை அடக்கி மறைத்துக்கொண்டான். மறுபடியும் சாவதானமாகப் பேசினான்.

“ஜோத்பாய்! இன்று ராஜபுத்திரர்களுக்கு வேறு வழியே கிடையாது! போனதைப் பற்றியும் நமது புராதனத் தூய்மையைப் பற்றியும் வீரத்தைப் பற்றியும் நினைத்து என்ன பயன்? பிரயோஜனமில்லை!... ஒருசிலர் தங்கள் சுகத்தையும், உயிரையும் —மானத்தையும்கூட — தியாகம் செய்ய இப்பொழுது முன்வர வேண்டும் — உடனே! இல்லாவிட்டால் ஹிந்து நாகரிகம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும்.”

“அதற்கு நான்தானா அகப்பட்டேன் பலியாக?”

“எல்லோரும் அப்படிச் சொல்லிவிட்டால்? மேலும், இப்பொழுது ராஜஸ்தானத்தில் அப்பேர்ப்பட்ட தியாகத்திற்கு வேறு யாரும் அருகரில்லை! உன்னுடைய இணையற்ற கல்வி, அறிவு, அழகு—”

ஜோத்பாய் தலையிலடித்துக்கொண்டாள்.

“என் பாழும் அழகும் கல்வியும் அறிவும்—நான் என் செல்வமாகக் கருதிய இவையா எனக்குத் துரோகிகளாக வந்து மூளவேண்டும்?”

“சிறு நோக்கு கூடாது. முன்னே இருப்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். உன் ஒப்பற்ற குணங்கள் ஒரு சாம்ராஜ்யத்தின் பிற்காலத்திற்கு இன்றியமையாத உதவியாக இருக்குமானால், இந்த சமயத்தில் தனி வாழ்வின் அற்ப சுகங்களைப் பற்றி நினைக்கலாமா? அது குற்றமல்லவா?”

“எது அற்ப சுகம்?”

மான்சிங் பதில் சொல்லவில்லை. சற்றுநேரம் கழித்து மறுபடியும் பேசலானான்.

“ஜோத்பாய்! ஹிந்துஸ்தானத்தையே ஒரு குடையின் கீழ் கொண்டுவந்துவிட்ட அக்பர் சக்கரவர்த்திக்கு நீ மகிஷியாகவும் நான் பிரதம தளகர்த்தனாகவும் இருந்தால் நாட்டிற்கு எவ்வளவு நலம் ஏற்படலாம் என்பதை யோசித்துப்பார்!”

“நாமென்ன ஆவது? உன் வீரம் என்ன ஆவது? என் மானம் என்ன ஆவது?”

“இவைகளுக்கெல்லாம் காலதேசவர்த்தமானங்களை ஒட்டித்தான்

மதிப்பு. ஒரு சமயத்து வீரம் மற்றோர் சமயம் மடமையாகலாம். சாதாரணமாக மானக்குறைவு என்று கருதிச் செய்யும் காரியம் ஒரு அசாதாரணமான நிலைமையில் மகா உத்கிருஷ்டமானதாகவும் மாறலாம் — அவசியமாகலாம்!”

“அவசியமானால் சரியாகுமா?”

“ஜோத்பாய்! இது யுகம் யுகமாக கேட்கப்படும் கேள்வி. ஒவ்வொரு மகா நெருக்கடி காலத்திலும், சரித்திரத்தில், ஒவ்வொரு விதமான பதில் அளிக்கப்பட்டிருக்கிறது... சரி, தப்பு என்பவைகளுக்கு சந்தர்ப்பத்தை ஒட்டாத ஒரு அர்த்தம் எப்பொழுதாவது இருக்கிறதா?”

“அண்ணா! நீ சொல்லுவதெல்லாம் தப்பு என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் எனக்கு பதில் சொல்லத் தெரியவில்லை.”

“பதில் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? நீ அக்பரை மணப்பதில் என்ன தப்பு?”

“அவர் மிலேச்சன்!”

“அக்பர் சுத்த வீரன். மொகலாயர் ஆரிய வம்சத்தின் ஒரு பிரிவினர்தான்!”

“அவர் மகம்மதியர்!”

“மதப்பித்து கொண்டவர் அன்று. விரிந்த நோக்குடையவர். நாமிருவரும் அவரைக் கொண்டு ஹிந்துஸ்தானத்தை உயிர்ப்பிக்கலாம். இந்நாட்டில் புதியதோர் வீரம் தோன்றும்!”

“ராஜபுத்திர வீரம்?”

“ராஜபுத்திர வீரம் இனிமேல் தனிக்கங்கையாகப் போகமுடியாது. யமுனையாகிய மொகலாய வீரத்துடன் கலந்துதான் செல்லவேண்டும்!”

“அது சாவன்றோ?”

“சாவன்று! நவஜீவனம்!”

“அண்ணா! ஜன்மமெடுத்ததற்கு நான் இந்த உயிரில் கொஞ்சம் ஆறுதல் கொள்ள வேண்டாமா? ஆயுள் பரியந்தம் என் மனதிற்குப் பிடிக்காத ஒரு நிலையில் தவிக்க முடியுமா?”

“அக்பர் உன் மனதைக் கவர்ந்துவிடுவார். எனக்கு அது நிச்சயமாகத் தெரியும்!”

“நாம் அவரது மனதைக் கவரத் தவறினால்?”

“கவர்ந்துவிட்டோம் ஏற்கனவே! நான் நாளை முதல் அக்பரின் பிரதம தளகர்த்தன்! அவர் என் மூலமாக மிகுந்த ஆவலுடன் அவர் இஷ்டத்தை உனக்குச் சொல்லியனுப்பியிருக்கிறார். சரிதானே?”

“மான் சிங்! எனக்கு ஒன்றும் தெரியவில்லை. என் கண்களைக் கட்டிவிட்டு என்னை எங்கோ அழைத்துச் செல்கிறாய். நான் என்ன செய்யட்டும்?”

அவள் தவிப்பைக் கண்டு மான் சிங்கின் மனம் இளகிற்று. அவள் தலையைத் தொட்டு, “கண்மணி! நான் உனக்குக் கெடுதல் செய்வேனா? உன்னைத் தோளில் சுமந்து வளர்த்த நான்—என் சிறந்த சிற்பமாகிய உன்னை—”

பழைய நினைவுகள் இருவர் மனதிலும் ஒரே சமயத்தில் பாய்ந்தன. சிறு குழந்தைகளாக இருவரும் ஓடியாடிய பருவமும் பிறகு சிறுவன் சிறுமிகளாக ஆகாசக் கோட்டைகள் கட்டி ஆனந்தமடைந்ததும் சித்திரக் காட்சி போல மனத்தின்முன் தோன்றின.

“அண்ணா! நீ சொல்லுகிறபடி கேட்கிறேன்— என்றும் போல இன்றும்! நீ சரியானதைத்தான் சொல்லுவாய். அக்பருக்கு என்ன சொல்லியனுப்ப வேண்டுமோ அதை உடனே சொல்லியனுப்பிவிடு!” என்று ஜோத்பாய் சாவதானமாகச் சொன்னாள். ஆனால் அவள் முகத்தில் மாறுதலோ அல்லது அமைதியின் அடையாளமோ தென்படவில்லை.

ஜோத்பாய் இப்படி திடீரென்று தன் யோசனையை அங்கீகரித்தது மான் சிங்கிற்குக் கலவரத்தை உண்டாக்கிவிட்டது.

“க்ஷத்திரியர்களுக்கு யுகதர்மத்தை அனுசரிக்க வேண்டிய கண்டிப்பு இருக்கிறது. அவர்களால்தான் தேசம் நிலைகொள்ளுகிறது. மற்ற ஜாதிகளுக்குக்கூட அவ்வளவு கண்டிப்பு கிடையாது. அது கடமை. சமரஸமும் யுத்தத்தில் ஒரு முறை. அது இப்பொழுது மிகவும் அவசியம்”

“மான்சிங்! இதெல்லாம் எனக்கு எதற்கு? நீ என் குரு. உன் வார்த்தை எனக்கு சத்தியம். அது போதும்.”

“நிஜமாகவா சொல்லுகிறாய், ஜோத்பாய்?” என்று மான் சிங் ஆச்சரியத்துடன் கேட்டான்.

“சத்தியமாக!” என்று சொல்லிக்கொண்டு ஜோத்பாய் எழுந்து நின்றாள். அவள் முகம் ஜொலித்தது.

“மான்! உனக்காக நான் எது வேண்டுமானாலும் செய்கிறேன்! நான் அக்பரின் மனைவியாகிறேன்!”

“'எனக்காக அன்று, ஜோத்பாய்! ஹிந்துஸ்தானத்திற்காக!”

ஜோத்பாய் மௌனமாக மான் சிங்கின் காலடியில் மண்டியிட்டு அவன் கால்களைக் கட்டிக்கொண்டாள்.

மான் சிங் அவள் சிரத்தைத் தொட்டுக்கொண்டே பவானியின் உருவத்தைப் பார்த்தான்.

“அம்மா! சரித்திரத்தில் நீ அழியாத தியாக விக்ரகமாக விளங்குவாய்!” என்று சொல்லி மலமலவென்று கண்ணீர் உதிர்த்தான்.

- 1943

# 15. அனார்க்கலி

“அக்பர் பாதுஷாவின் மகனாகப் பிறந்த பிறகு நீ உன் இஷ்டப்படி நடப்பதற்கு இடமில்லை.”

“சக்கரவர்த்தியின் மகன் என்றால் எனக்கு உணர்ச்சிகள் இருக்கக் கூடாதா?”

“ராஜாங்கத்தின் நிபந்தனைகளுக்குட்பட்டுதான் அந்த உணர்ச்சிகளுக்கு இடமுண்டு.”

“ராஜகுமாரனாகப் பிறந்ததற்காக நான் மனிதன் என்ற சுதந்திரத்தை இழக்க முடியுமா?”

“ஸலீம், நீ விஷயத்தை ஆலோசனை செய்து பார்க்காமல் பேசுகிறாய். ஒரு சாம்ராஜ்யத்திற்குப் பலமான அஸ்திவாரம் போட்டு கட்டடம் ஏற்றிவரும் சக்கரவர்த்தி நான். எனக்கு மகனாகப் பிறந்த நீ, நான் போட்டிருக்கும் திட்டத்திற்கு விரோதமாகக் காரியம் செய்வது முதலில், என் மகன் என்ற முறையிலேயே உனக்கு அழகன்று; இரண்டாவதாக, யுவராஜா என்ற முறையில் தப்பு. நீ உன்னிஷ்டப்படி நடப்பதென்றால் நான் ராஜ்ய பாரம் நடத்த முடியாது. உன்னுடைய ஒவ்வொரு செய்கையும் என் சாம்ராஜ்ய சிருஷ்டியுடன் தொடர்பு கொண்டது. நல்லதானாலும் கெட்டதானாலும் நீ செய்வது அதைப் பாதிக்கும். தந்தைக்கும் மகனுக்கும் உள்ள சம்பந்தத்தை அறுக்க முடியுமா? இப்போதுள்ள சக்கரவர்த்திக்கும் இனி வரப்போகும் சக்கரவர்த்திக்கும் இடையே இருக்கும் சம்பந்தத்தையும் அறுக்க முடியாது.”

அக்பர் பாதுஷா ஸலீமைத் தன் அறைக்கு வரவழைத்து உட்கார வைத்துக்கொண்டு அந்தரங்கமாக அவனுடன் வாக்குவாதம் செய்துகொண்டிருந்தார்.

மாலை நேரம். ஸலீம் ஜன்னலடியில் உட்கார்ந்துகொண்டு தூரத்தில் தெரிந்த யமுனா நதிக்கரையைக் கவனிப்பவன் போல பார்வையைத் தூரச் செலுத்தி யோசனையிலாழ்ந்திருந்தான். அக்பர் அவனுடைய முகத்தை உற்று கவனித்துக்கொண்டு அவன் மனதை மாற்றுவதற்கான காரணங்களை எடுத்துச்சொல்லிக்கொண்டிருந்தார்.

திடீரென்று ஸலீம் தன் முகத்தைத் தகப்பனார் பக்கம் திருப்பி, “என் இஷ்டத்தை நான் பூர்த்திசெய்துகொள்ள முடியாவிட்டால் ராஜ பதவி எனக்கெதற்கு?” என்று கேட்டான்.

“உனது இஷ்டத்தைப் பூர்த்திசெய்துகொள்வதற்கா ராஜ பதவி? இல்லை. அதில் உனது இஷ்டம் என்பது தனியாக இருக்கமுடியாது.”

“அந்தப் பதவி எனக்கு வேண்டாம், அவ்வளவுதானே? அதிலும் ஏதாவது கட்டாயம் உண்டோ?” என்று ஸலீம் வெடுக்கென்று கேட்டான்.

அக்பர் முகம் கொஞ்சம் சிவந்தது. ஆனால், தனது கோபத்தை உடனே அடக்கிக்கொண்டு அமைதியாகவே பதில் சொன்னார்.

“ஸலீம், நான் சொல்லுவதை நீ கொஞ்சம் நன்றாகக் கேட்கவேண்டும். இன்று மொகலாயர் ஹிந்துஸ்தானத்தில் ஒரு விசித்திரமான நிலைமையில் இருக்கிறார்கள். கேவலம் மிருக பலத்தால், ஆள் கூட்டத்தால், ஜனங்களின் மேல் ஆதிக்கம் கொண்டுவிட்டார்கள். ஆனால், இந்த வெற்றி என்றும் நிலைக்காது. இது நிரந்தரமாக நிற்கவேண்டுமானால் ஜனங்களைப் பல ராஜதந்திர முறைகளில் வசப்படுத்தவேண்டும். அவர்களுடைய எதிர்ப்பைச் செயலற்றுப்போகும்படி செய்யவேண்டும்.”

“அதற்காக நீங்கள் செய்ததெல்லாம் போதாதா? ராஜ்யப் பொறுப்பற்ற நான் ஏன் அதில் ஈடுபட்டு என் வாழ்க்கையின்பத்தை இழக்கவேண்டும்? நீங்கள் என்னையும் இப்படி நிர்பந்தம் செய்வது முறையா?” என்று ஸலீம் மனங்கலங்கி கொஞ்சம் கெஞ்சும் பாவனையாக கேட்டான்.

“பார்க்கப் போனால், முறையென்பது என்ன ஸலீம்?” என்று கேட்டார் அக்பர்.

“கூடாது, கூடாது! நீங்கள் இந்த விஷயத்தில் என்னைக் கட்டுப்படுத்தக்கூடாது. அனார்க்கலி இல்லாமல் என்னால் இருக்க முடியாது!”

“அனார்க்கலியை நீ மணந்துகொள்வதில் அநேக சங்கடங்கள் இருக்கின்றன. ராஜதந்திர முறையை அனுசரித்து நீ இப்பொழுது ஒரு ராஜபுத்திரப் பெண்ணை மணந்துகொள்ளவேண்டியது அவசியமாக இருக்கிறது. உன் தாயார் ஒரு ராஜபுத்திர ஸ்திரீயாக இருப்பது மொகலாய சாம்ராஜ்யத்திற்கு ஒரு அடிப்படையான பலம். உன் மனைவியும் - அதாவது வரப்போகிற ராணியும் ராஜபுத்ர ஸ்திரீயாக இருந்தால் ஹிந்து - முஸ்லீம் ஒற்றுமை சம்பூர்ணமாகும். என் திட்டம் வெற்றிபெற்றுவிடும். மொகலாயர்கள் ஹிந்துக்களாகிவிடுவார்கள். இந்தியருடன் கலந்துவிடுவார்கள். அனார்க்கலியை நீ மணப்பது வருங்காலத்தில் ராஜ்யபாரத்திற்கு மிகவும் இடைஞ்சலாக இருக்கும். ஆகையால் ஸலீம், அனார்க்கலியைக் பற்றிய எண்ணத்தை நீ

அகற்றிவிடவேண்டும். அது மிகவும் அவசியம். இனிமேல் நீ அனார்க்கலியைக் காணமுடியாது.”

“இந்த ராஜ்யம் எனக்கு வேண்டாம்; எனக்கு அனார்க்கலிதான் வேண்டும்!” என்று ஸலீம் உறுதியாகச் சொன்னான்.

“ஸலீம், நானும் இளைஞனாக இருந்தவன்தான். உன் தாயை ஒரு காலத்தில் நானும் காதலித்துக் கைபற்றியவன்தான். நான் அனுபவத்தின் பேரில் சொல்லுகிறேன்; தெரிந்துகொள். வாழ்க்கையில் காதல் மட்டும் பிரதானமானதன்று. சரித்திரக் கீர்த்திதான் சிறந்தது. அதுதான் உன் பெயரை எக்காலத்திற்கும் பொன் எழுத்தில் பொறித்து நிறுத்தும்.”

“அந்தக் கீர்த்தி எனக்கு வேண்டாம். அனார்க்கலியின் காதல் எனக்கு மேலானது.”

***

தன் மகனின் பிடிவாதத்தைப் பார்த்து அக்பர் மனம் கலங்கிப்போனார். ஆனால், ஸலீமுக்கும் அனார்க்கலிக்கும் இடையே இருந்த காதலின் ஆழத்தையும் மேன்மையையும் அவர் அறிந்திருந்தார். தன் அரண்மனையிலிருந்த அந்த அழகிய முஸ்லீம் பெண்ணின் மேல் தன் மகனுக்கு அப்பேர்ப்பட்ட பற்று ஏற்பட்டதைக் குறித்து அக்பர் விசனப்பட்டதுமுண்டு. ஸலீமுடைய முதற்காதலைத் தான் அப்படி பங்கப்படுத்த வேண்டியிருந்ததே என்று மிகவும் பரிதாபப்பட்டார்.

ஆனால், அக்பர் பாதுஷாவின் கண் முன் சாம்ராஜ்யக் கனவு ஒன்றுதான் நின்றது. அதற்கான வழிகளில்தான் அவருடைய மனது ஓடிற்று. மொகலாய ஏகாதிபத்தியத்திற்கு முக்கிய இடரான ராஜபுத்திரர்களை எப்படியாவது சமரஸ முறையில் கைக்குள் போட்டுக்கொள்ள வேண்டுமென்பது அவரது முதல் கொள்கை. அதன் பூர்வாங்கமாகத்தான் அவர் ஸலீமின் தாயை ராஜபுத்திர குலத்திலிருந்து மணந்துகொண்டார். ஸலீமும் மான் பாயை மணந்துவிட்டால் ராஜபுத்திர எதிர்ப்பு செயலற்றுப் போகும். பிறகு மான் சிங்கையும் தோடர் மாலையும் இரு கரங்களாக வைத்துக்கொண்டு ஹிந்துஸ்தானத்தின் மக்களை ஒன்றுபடுத்திவிடலாம் என்பது அவர் கனவு.

***

இந்த மகத்தான ஆசைக்குத் தன் மகன் கொண்ட காதல் ஒரு இடையூறாக வந்து மூண்டது அக்பருக்குக் கோபத்தை உண்டாக்கிற்று. சரித்திரத்திலேயே நிரந்தரமாக பரிமளிக்கப்போகிற தன் வேலைக்குத்

தடையாக அனார்க்கலி என்ற ஒரு சிறு பெண் தோன்றியது அவருக்குப் பிடிக்கவில்லை. அந்த இடையூறை ஒரு முள் போல அகற்றி எறிந்துவிடவேண்டியதுதான் என்று தீர்மானித்தார்.

"ஸலீம், இதில் சம்பந்தப்பட்டிருப்பது உன் கீர்த்தியன்று, என் வாழ்க்கையின்பம், என் ஆசை, என் ஜீவிய தத்துவம் - அது உன்னாலா அழியவேண்டும்? என் மனக்கோட்டையை இடித்துத் தள்ள நீயா - என் தலைமகனான நீயா - முற்படவேண்டும்? என்னைக் காட்டிலும் உனக்கு அனார்க்கலி மேலா - நேற்று முளைத்த பெண்?" என்று அக்பர் உணர்ச்சியுடன் பேசினார்.

"என்னைக் காட்டிலும் உங்களுக்கு உங்கள் கீர்த்தி மேலா? அதற்கு என்னையும் என் காதலியையும் பலியிடப் பார்க்கிறீர்களே?" என்று ஸலீம் சட்டென்று குறுக்கிட்டு கேட்டான்.

அக்பர் திகைப்படைந்துபோனார். ஆனால், தன்னுடைய தீர்மானத்தை மாற்றவேண்டுமென்ற எண்ணமே அவருக்கு ஏற்படவில்லை.

"அதுதான் முதலிலேயே சொன்னேனே - என் கீர்த்தி சுயநலத்தில் முளைப்பதன்று. அதில் எனக்கு மட்டும் திருப்தியென்பதில்லை. ஹிந்துஸ்தானமே நிம்மதியடையும்; சீரடையும். அதில்தான் என் ஆசை, அதில்தான் என் உயிர். அதை வளர்த்தால் நீயும் உயர்வடைவாய். சரித்திரம் உன்னை வாயாறப் புகழும்."

"எனக்குப் புகழ் வேண்டாம், பெருமை வேண்டாம், பதவியும் வேண்டாம்-"

"நான்கூட வேண்டாமா?" என்று கோபத்துடன் கேட்டார்.

ஸலீமுக்கு அக்பர் சொன்னது காதில் ஏறவில்லை.

"அனார்க்கலிதான் வேண்டும்!" என்று ஸலீம் நிதானமாக, தீர்மானத்துடன் சொன்னான்.

"உன்னைப் பெற்ற தகப்பன் அன்பு உனக்கு வேண்டாமா!"

"நீங்கள் கேட்கும் கேள்வியை நான் திருப்பித்தான் கேட்கவேண்டும். என்மேல் - நீங்கள் பெற்றெடுத்த பிள்ளைமேல் - உங்களுக்கு அன்பு இல்லையா?"

"அனார்க்கலியை மறந்துவிடு. மான் பாய் அவளைவிட அழகானவள்."

"அனார்க்கலியிடம் அழகுமட்டுமில்லையே!"

"பின்?" என்று அக்பர் ஆச்சரியத்துடன் கேட்டார்.

“அவள் என்னை அடிமையாக்கிக்கொண்டுவிட்டாள். இனிமேல் வேறு யாராலும் என்னை அவளிடமிருந்து மீட்க முடியாது.”

“அவளே அடிமை என்பதை மறந்துவிட்டாயா உன் மோகத்தில்?”

“அவள் உங்கள் அடிமையாயிருக்கலாம். என் ஹிருதயத்தின் அரசி!”

“உன் அரசியை நீ மறுபடி சந்தித்தால்தானே? சரி, நீ போகலாம்!” என்று அக்பர் அடங்காத கோபத்துடன் சொன்னார்.

ஸலீம் மறுவார்த்தை சொல்லாமல் எழுந்து வெளியே போனான். எப்பொழுது போகச் சொல்லப் போகிறார் என்று துடித்துக்கொண்டிருந்தான். அனார்க்கலியின் அழகு சொட்டும் முகம் அவனைக் கையெடுத்துக் கூப்பிட்டது.

அக்பருக்கு யோசனை ஓடவில்லை. இளம் காதலர்களின் இன்பக்கனவு வெகுநேரம் அவருடைய மனதில் தோன்றித்தோன்றி அவருடைய உறுதியைச் சோதனை செய்தது. கடைசியாக மனோதிடம் கொண்டு அனார்க்கலிக்குச் சொல்லியனுப்பினார்.

பதுமையே பெயர்ந்து வருவது போல வந்தாள் அனார்க்கலி. ஒடிந்து விழுவது போன்ற வாட்டமான தேகமுடையவள். ஜ்வாலை விட்டெரிந்த நல்ல சிவப்பு மேனி. தந்தத்தைக் கடைசல் பிடித்தது போன்ற முகவெட்டு. நாசி, வாய், அங்கங்கள். மூடிய உதடுகள் ஒரு மாதுளை மொக்குப் போலவே சிவப்பாகக் கோடியில் கூர்ந்து இருந்தன. கைகால் விரல்களில் மருதாணிக்காவி கிளிமூக்குச் சிவப்பாக இருந்தது. சரிகைமயமான பட்டாடை உடுத்திருந்தாள். வெண்மையான மஸ்லின் துணியை முக்காடாகப்போட்டு முகத்தை மூடி உடலையும் போர்த்திக்கொண்டிருந்தாள். பாதங்களும் கைகளும்தான் வெளியில் தெரிந்தன. கால் சதங்கை மெல்ல ஒலிக்க அவள் உள்ளே வந்து நின்ற கொஞ்ச நேரத்திற்குப் பிறகுதான் அக்பர் அவளைப் பார்த்தார்.

“குழந்தாய் அனார்க்கலி! மிகவும் முக்கியமான விஷயமாக உன்னை இங்கே வரவழைத்தேன்.”

“உத்தரவு வந்தவுடனேயே புறப்பட்டு வந்துவிட்டேன், மகராஜ்!”

“நீ ஸலீமை உண்மையாகக் காதலிக்கிறாயா?” என்று அக்பர் அவள் முகத்தைக் கூர்ந்து கவனித்துக்கொண்டு கேட்டார்.

வெட்கத்தாலோ கோபத்தாலோ அனார்க்கலியின் முகம் சிவந்துவிட்டது. தலைகுனிந்துகொண்டு பதில் சொல்லாமல் நின்றாள்.

“நீ அவனைக் காதலிப்பது உண்மையானால் அவனுக்காக நீ எது

வேண்டுமானாலும் செய்வாயல்லவா?”

அக்பரின் கேள்வி அனார்க்கலிக்கு சந்தேகத்தை உண்டாக்கிற்று. ஸலீமின் அனுமதியின்றி முதலில் ஒன்றும் அஜாக்கிரதையாக வார்த்தை கொடுத்துவிடக் கூடாதென்று தீர்மானித்துக்கொண்டாள்.

“நான் என்ன செய்யவேண்டும், மகராஜ்?” என்று கேட்டாள்.

“அவனுடைய நன்மையைத்தான் நான் கோருவேன் என்பது உனக்கு நிச்சயம்தானே?” என்று அக்பர் கேட்டார்.

“அதற்கு நான் என்ன பதில் சொல்லட்டும்?” என்று அனார்க்கலி தரையைப் பார்த்துக்கொண்டு சொன்னாள்.

அவள் சாதுரியத்தைக் கண்டு அக்பர் ஆச்சரியமடைந்தார்.

“நீ உண்மையில் கெட்டிக்காரிதான்! ஆகையால் நீயே நிலைமையை நன்றாக அர்த்தம் செய்துகொள்ளுவாய். நான் அதிகம் சொல்லவேண்டியதில்லை என்று நினைக்கிறேன்... அவன் நன்மையை உத்தேசித்து.... என்ன... நீ அவனை மறந்துவிட வேண்டும், அனார்க்கலி!” என்றார் அக்பர்.

அனார்க்கலி உலுக்கி விழுந்ததை அக்பர் கவனித்ததும் கவனிக்காதது போல வேகமாக மேலே பேசினார்.

“அவன் என் மகன் என்ற காரணத்தால் உன்னை மணப்பதிற்கில்லை என்றதை மட்டும் உனக்குச் சொல்லுகிறேன். நீ அவனை மறக்க வேண்டும்.”

அனார்க்கலி அமைதி கொண்டுவிட்டாள் ஒரு கணத்தில்.

“நான் யார், அவரை மறக்கவோ அல்லது நினைவில் வைத்துக்கொள்ளவோ?” என்று நிதானமாகச் சொன்னாள்.

“அப்படியென்றால்?”

“அவ்விஷயத்தில் ராஜகுமாரர் எனக்கு உரிமை கொடுக்கவில்லை.”

அக்பருக்கு அவளுடைய பதில் திருப்தி அளிக்கவே இல்லை. அவர் முகம் சிவந்தது.

“பெண்ணே! நீ என்ன சொல்லுகிறாய்?” என்று அதட்டிக் கேட்டார்.

“நான் இந்த விஷயத்தில் சொல்லுவதற்கு ஒன்றுமே இல்லை!”

“நீ சொல்லாவிட்டால் நான் சொல்லுகிறேன் கேள், உனக்கும் ஸலீமுக்கும் இனிமேல் சந்திப்பு கிடையாது!”

“அது ராஜகுமாரர் மூலம் எனக்குத் தெரியலாமே! என்னை வரவழைத்ததெதற்கு? உத்தரவானால் நான் போகிறேன்.”

அக்பரின் கோபம் இன்னும் அதிகரித்தது.

“ராஜகுமாரனுக்கும் உனக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. நீ என் அடிமை-”

“நான் உங்கள் அடிமையா! என் மனது உங்கள் அடிமை அன்று! அது ராஜகுமாரர் அடிமை!” என்று அனார்க்கலி குறுக்கிட்டு, முகம் ஜ்வலிக்கக் கூறினாள்.

“நீ அதிகப்பிரசங்கியான பெண்ணாய் இருக்கிறாய்! நீ ஸலீமை விடமாட்டாயா?”

அக்பர் அந்தமாதிரி கேட்டது அனார்க்கலிக்குக் குத்தினது போலிருந்தது.

“விடமாட்டேன்!” என்று மெய்ம்மறந்து கூறினாள்.

“நீ அறியாப்பெண். உன் இச்சையைப் பூர்த்திசெய்துகொள்வதற்காக ஒரு ராஜகுமாரனை அவனுடைய ஆசனத்திலிருந்து கீழே இழுக்கிறாய்.”

“இல்லை, ஷாஹன்ஷாஹ்! அவர்தான் என்னை அன்பின் உன்னத ஆசனத்தில் ஏற்றி உட்காரவைத்திருக்கிறார்.”

“நீ அவனைக் காணமுடியாது இனிமேல்!”

“பாதகமில்லை!”

“ஆகவே மணக்கவும் முடியாது!”

“நான் கேட்கவில்லையே, மணமே வேண்டாம். அவர் நினைவு எனக்குப் போதும்... அது போகாது. அதை யார் தடுக்க முடியும் ஷாஹன்ஷாஹ்?”

“நான் உன் நினைவே இல்லாமல் - நீயே இல்லாமல் - செய்துவிட்டால்?”

“இவ்வளவுதானா உங்கள் சாமர்த்தியம்! நான் இல்லாமற்போனால் என்ன? உலகத்தில் அனார்க்கலி - மாதுளை மொக்கு - இருக்கும்வரை, என் நினைவு ஸலீமின் ஹிருதயத்திலும் உலக இலக்கியத்தின் ஹிருதயத்திலும் மறையாது! இன்று நீங்கள் என்னை அழித்துவிட்டாலும் உலகத்தில் மாதுளை மொக்கைப் பற்றிய கதை மறையாது!”

அனார்க்கலி மெய்ம்மறந்து சிறிது நேரம் அப்படியே ஸ்தம்பித்துப்போனாள். பிறகு திரும்பி அந்தப்புரத்தின் பக்கம்

போய்விட்டாள்.

அக்பர் திகைத்துப்போய் நின்றார். போர்முனையில்கூட இப்பேர்ப்பட்ட எதிரியை அவர் சந்தித்ததே கிடையாது. அவருடைய வெற்றிகளின் இறுதியில், ஒரு பெண்ணின் கையில் அவர் அடைந்த இந்தத் தோல்வி அவருக்குத் தாங்கமுடியாததாகப் போயிற்று. வெட்கமும் ஆத்திரமும் பொங்கி எழுந்தன. அவருடைய மனது தடுமாறிற்று. உரக்கப் பேசலானார்:

“இல்லை! நான் தணியமுடியாது! இவ்வளவு காலத்திற்குப் பிறகு இந்தச் சின்ன காரணத்தால் என் ஆசை வீணாவதா? கூடாது? பாவம், ஸலீமின் ஆசை மண்ணாகிறது. ஆனால், என்ன செய்கிறது? காதலுக்கு இங்கே இடமில்லை! என் வழியிலிருக்கும் இந்த முள்ளைக் கூசாமல் எடுத்தெறிந்துவிட வேண்டியதுதான்!”

எங்கும் இருள் சூழ்ந்துவிட்டது. ஒரு நட்சத்திரம் வானத்திலிருந்து உதிர்ந்து விழுந்து அந்தகாரத்தில் மறைந்தது.

- 1943

---

இளவரசன் ஸலீமின் முதற்காதலியின் பெயர் அனார்க்கலி – மாதுளை மொக்கு.

# 16. துரோகமா?

தஞ்சை நாயக அரசன் செங்கமலதாசு ஒரு தர்ம சங்கடமான நிலைமையில் இருந்தான். தனது தாதியின் சிபார்சின் பேரில், தான் அவளுடைய பந்துவை தளகர்த்த பிரதானியாக நியமித்த நாள் முதல் தகராறு ஆரம்பித்துவிட்டது. சிதம்பரம் செட்டியார் என்ற அந்தப் புதிய உத்தியோகஸ்தரும் தாதியுமாகச் சேர்ந்துகொண்டு ராஜ்யத்தில் பெரும் செல்வாக்கும் பெயரும் கொண்டு ராயஸம் வெங்கன்னாவுக்கு விரோதமாகச் சதி செய்ய ஆரம்பித்தார்கள்.

ராயஸம் வெங்கன்னாதான் ராஜ்யத்தைச் செங்கமலதாசுக்குத் திரும்பி வாங்கித் தந்தவர் என்றாலும், செங்கமலதாசால் தனது தாதியின் சொல்லை மீறமுடியவில்லை. எனவே அரசன் ஓரளவு ராயஸம் வெங்கன்னாவின் யோசனைகளை மதிக்காமல் காரியங்கள் நடத்த ஆரம்பித்தான். அவர் சொற்படி நாட்டை நாளுக்கு நாள் முன்னேற்றமடையச் செய்யத் தயங்கினான்.

ராயஸம் வெங்கன்னா தன் நிலைமையை உணர்ந்து மனம் நொந்தார். நாட்டின் மேன்மைக்குத்தான் பதினைந்து வருஷங்களுக்கு மேலாக பட்ட பாடமெல்லாம் வீணாவதைக் கண்டு கலங்கினார். அரசனை அணுகி தன் மனதிலிருந்ததை உணர்ச்சியுடன் சொன்னார்.

“நீங்கள் செய்ததை யார் இல்லை என்று சொன்னார்கள்?” என்று தாசு கேட்டான்.

“நான் செய்ததெல்லாம் சரியென்று நீங்கள் ஒப்புகொண்டதற்கு அடையாளம் தென்படவில்லையே” என்று வெங்கன்னா மன வருத்தத்துடன் சொன்னார்.

செங்கமலதாசுக்குக் கோபம் வந்து விட்டது. “நான் எவ்வளவோ உங்கள் இஷ்டப்படி நடந்துகொண்டும் நீங்கள் இப்படிப் புகார் செய்கிறீர்கள். நான் சிதம்பரம் செட்டியாரை முக்கிமான ஸ்தானத்துக்கு நியமித்துவிட்டேன் என்று உங்களுக்குக் கோபம். நீங்கள்தான் சர்வாதிகாரியாக இருக்கவேண்டும் என்று நினைக்கிறீர்கள்” என்று அரசன் கடுமையாகச் சொன்னான்.

“அரசே, இப்படி நீங்கள் என்னைப் பற்றி கடுமையாகச் சொல்வது என் மனதைப் பிளக்கிறது. நான் சர்வாதிகாரியாக இருக்க விரும்பினால் இப்படியெல்லாம் செய்திருப்பேனா என்ன?”

“எப்படி யெல்லாம்?”

“உதாரணமாக, உங்களை இவ்வளவு கஷ்டப்பட்டு ரகசியமாக வளர்த்து மறுபடியும் நாட்டிற்குக் கொண்டுவந்திருக்கமாட்டேன்” என்று வெங்கன்னா வெடுக்கென்று சொன்னார் மனஸ்தாபத்தின் மிகுதியால்.

ராயஸம் சொன்ன வார்த்தைகள் அரசன் உள்ளத்தில் சுருக்கென்று தைத்துவிட்டன.

“உங்கள் அதிகாரத்தை நான் நிலைநிறுத்தி உங்கள் அடிமையாக வாழ்வேன் என்று நினைத்துச் செய்திருப்பீர்கள்” என்று அவன் சொன்ன பொழுது வெங்கன்னா மனம் துடிதுடித்தது.

“அல்ல, அல்ல; என் தாய் மகாராணி லக்ஷ்மிதேவிக்கு நான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றினேன் அவ்வளவுதான்.”

“என்ன?”

“ஆமாம்! உங்களுக்கு அது நினைவு இருக்கிறதோ என்னமோ! மன்னர் விஜயராகவ நாயகர் கடைசியாகப் போர்முனைக்குப் போகும் முன் மகாராணி என்னைக் கூப்பிட்டுவிட்டார். தனியாக என்னையும் உங்களையும் வைத்துக்கொண்டு என்னிடம் வாக்குத்தத்தம் வாங்கினார். உங்களை எங்காவது மறைத்து வைத்திருந்து தகுந்த சமயத்தில் மறுபடியும் தஞ்சை சிம்மாசனத்தில் ஏற்றிவைக்க வேண்டுமென்று எனக்கு உத்தரவிட்டார். விஜயராகவரின் வம்சம் அழியக்கூடாதென்று நான் அப்படியே செய்வதாக வாக்குத்தத்தம் செய்துகொடுத்தேன். பிறகுதான் மகாராணி தன் பிராணனை விட்டார்.”

“உம்முடைய கடமையைச் செய்தீர். அவ்வளவுதானே?”

“ஆமாம்! கடமையைத்தான் செய்தேன்... ஆமாம்! கடமையைத்தான் செய்தேன்!” என்று வெங்கன்னா திரும்பித் திரும்பிச் சொன்னார்.

“அதனால் என்ன விசேஷமாக நீங்கள் செய்தது?” என்று இள அரசன் குத்திக் கேட்டான்.

“விசேஷம் ஒன்றுமே இல்லை. மகாராஜா” என்று வெங்கன்னா விக்கிப்போய் சொன்னார்.

“ஆனால்-” என்று மறுபடியும் அவர் பேச ஆரம்பித்த வார்த்தைகளிலிருந்த வேகத்தைக் கண்டு செங்கமலதாசே கொஞ்சம் திடுக்கிட்டுப் போய்விட்டார்.

“ஆனால்?”

“ஆனால், நான் கடமையைச் செய்த பொழுது நான் செய்தது சரிதான்

என்று எண்ணினேனா" என்று வெங்கன்னா சொன்னார்.

"ராயஸம்! நீங்கள் சொல்வது எனக்கு அர்த்தமாகவில்லை. விவரமாகச் சொல்லும்!" என்று அரசன் கர்ஜித்தான்.

"விவரமாகச் சொல்லுகிறேன் மகாராஜா! அப்படிச் சொல்லுவது எனக்கு அவ்வளவு சந்தோஷமான விஷயமல்ல என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்."

"வெங்கன்னா! நீங்கள் என்னுடைய தகப்பனார் காலத்திலிருந்தே மிகவும் செல்வாக்குடன் இருந்துவந்திருக்கிறீர்கள் என்ற காரணத்தைக் கொண்டு நீங்கள் இந்தமாதிரி சலுகை எடுத்துக்கொண்டு என்னை நடத்துவதை நீங்கள் உணரவேண்டும். நான் சிறுவனானாலும் தஞ்சை மன்னன். நீங்கள் வயது முதிர்ந்த ராஜதந்திரியானாலும் எனக்குட்பட்டு நடக்கவேண்டியவர்கள்."

"அதையெல்லாம் நீங்கள் எனக்கு ஞாபகமூட்டாமலேயே நான் நன்றாக அறிகிறேன். நீங்கள் மன்னனாக இருக்கவேண்டுமென்பதற்குத்தான் நான் பட்ட பாடெல்லாம் - கடவுளுக்குத் தெரியும். நீங்கள் மேலும் உண்மையாகவே இந்நாட்டிற்கு மன்னனாக இருக்கவேண்டுமென்பதுதான் என் பிரார்த்தனை."

"இப்பொழுது நான் உண்மையாக அப்படி இல்லையா?"

"இல்லை என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது."

"உங்கள் பேச்சையே நான் எல்லாவற்றிலும் கேட்கவில்லை என்பதனாலா?"

"அல்ல, அல்ல. யார் பேச்சைக் கேட்டாலும் நாட்டிற்கு நலமான காரியம் நடைபெறவேண்டியது அவசியம்; இன்று அது நடைபெறவில்லை."

"உங்கள் இஷ்டப்படியே எல்லாம் நடந்தேறவேண்டுமென்று நீங்கள் எண்ணுவது நடக்காத காரியம்."

"நான் உங்களுக்குக் கெட்டதைச் சொல்லுவேனா?" என்று வெங்கன்னா கலங்கின பொழுது, செங்கமலதாசு ஓரளவு தானே கலங்கிவிட்டான். சட்டென்று சமாளித்துக்கொண்டுவிட்டான்.

"நான்தான் உங்கள் சொற்படி நடக்கவில்லை என்று எப்படி தீர்மானிக்கிறீர்கள்?"

"நீங்கள் நடந்துகொள்ளும் விதத்திலிருந்து தெரியவில்லையா?"

"ஆ! சிதம்பரம் செட்டியார் உங்கள் கண்களை உறுத்துகிறார்.

உங்களுக்கு இணையாக வேறொருவர் இருக்கக்கூடாது! அப்படித்தானே?"

"மகாராஜா, நீங்கள் சொல்லுவது பாதி பிசகல்ல; சிதம்பரம் செட்டியார் என் கண்களை உறுத்தத்தான் செய்கிறார்; ஆனால் எனக்கு இணையாக மற்றொருவர் இருக்கக்கூடாதென்று நான் நினைப்பதாகச் சொல்வது பிசகு. என் ஸ்தானத்திலிருந்து இந்நாட்டைக் கவனிக்கத் தகுதியாக யாரும் இல்லையே என்றுதான் கலங்குகிறேன். எனக்கு வயதாகிவிட்டது."

"உடனே ரஜா கொடுக்கிறேன். ஓய்வெடுத்துக்கொள்ளுங்கள்."

"எனக்கு ஓய்வு எடுத்துக்கொள்ளும் காலம் இன்னும் வரவில்லை. விஜயராகவர் ஆண்ட நாட்டிற்கு நான் செய்யவேண்டியதை இன்னும் செய்து முடிக்கவில்லை. அது முடியும் வரை எனக்கு ஓய்வேது?"

"என்னை மீறியா?"

"அப்படியொன்றும் நிலைமை வந்துவிடாதென்றே நம்புகிறேன். இன்னும் உங்களைச் சரியான வழிக்குக் கொண்டுவரலாமென்றே எண்ணுகிறேன்."

"என்னை நல்ல வழிக்கா?"

"ஆமாம். நாட்டை இம்மாதிரி கெடுக்காமல், பிறருக்கு அடிமையாகும் நிலைக்குக் கொண்டுவராமல்-"

"ஓய், நிறுத்தும். மன்னன் முன்னிலையில் என்ன பேசவேண்டுமென்றுகூட-" என்று செங்கமலதாசு மெய்மறந்து கத்தினான்.

"அப்பா, குழந்தாய்! நீ மன்னவன்தான். ஆனால் முதலில் நான் கண்ணிற்குக் கண்ணாக வளர்த்த குழந்தை நீ. என் ஆசைகளையும் எண்ணங்களையும் உன் மூலமாக இந்த நாட்டில் உருவகப்படுத்தலாமென்று பேராசை கொண்டேன். நான் கொடுத்துவைக்கவில்லை. உன் மூலம் என் எண்ணங்கள் ஈடேறவில்லை; என் எண்ணங்கள் உண்மையாக நாட்டின் நலத்தைக் கோரினால் எப்படியாவது ஈடேரும்."

***

தஞ்சாவூர் கோட்டைக்கடுத்த ஒரு மைதானத்தில் தனி கூடாரமொன்றில் எக்கோஜியும் ராயஸம் வெங்கன்னாவும் தகுந்த ஆசனங்களில் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள்.

இரவு நல்ல நிலா வெளியில் பளிச்சென்று அடித்துக்கொண்டிருந்தது. மஹாராஷ்ட்ர சைனியத்தின் கூடாரங்களிலிருந்து விளக்குகள் மினுக்மினுக்கென்று தெரிந்தன.

விஜயராகவ நாயகரின் மகன் செங்கமலதாசை தஞ்சை சிம்மாஸனத்தில் ஏற்றிவைக்கும்படியாக பீஜப்பூர் சுல்தானால் அனுப்பப்பட்ட மராட்டிய வீரர் எக்கோஜி.

விஜயராகவ நாயகரைத் தோற்கடித்து தஞ்சை நாட்டைக் கைப்பற்றிக்கொண்ட அழகிரி நாயகரை விரட்ட எக்கோஜியை வரவழைத்தவர் ராயஸம் வெங்கன்னா.

இப்பொழுது செங்கமலதாசை அரசிலிருந்து நீக்கி தஞ்சை நாட்டைக் கைப்பற்றிக்கொள்ளும்படி வெங்கன்னா எக்கோஜியைத் தூண்டினார்.

"என்ன வெங்கன்னா, உம்மைப் பற்றி நான் எவ்வளவோ உயர்வாகவல்லாவா நினைத்திருந்தேன்!" என்று எக்கோஜி ஆரம்பித்தார்.

"இப்பொழுது என்ன செய்துவிட்டேன்? உம்முடைய மதிப்பை இழப்பதற்கு?"

"செங்கமலதாசு உமது இஷ்டப்படி நடக்கவில்லையென்பதற்காக, அவனைச் சிம்மாசனத்தில் உட்காரவைத்த நீரே அவனைக் கீழே தள்ளப் பார்க்கிறீரே?"

"அது எதனால் என்று நினைக்கிறீர்?"

"உம்முடைய அதிகாரம் செல்லவில்லையென்ற கோபத்தால்தான். அவனைக் கொண்டுவந்த பொழுது அவன் சிறுவன், நீர் சொன்னபடி கேட்பான் என்று நினைத்தீர். இப்பொழுது அவன் உமது பேச்சைக் கேட்காமல் காரியம் செய்வது உமக்குப் பிடிக்கவில்லை!"

வெங்கன்னா கர்வத்துடன், "அரசன் என் சொற்படி கேட்டுக்கொண்டிருக்க வேண்டுமென்று மட்டும் நான் நினைத்திருந்தால் இன்று அழகிரி நாயகரே ஆண்டுகொண்டிருப்பார், தெரியுமா எக்கோஜி?"

"பின்?"

"என் வேந்தன் விஜயராகவருடைய வம்சம் தஞ்சையில் ஆட்சிபுரிய வேண்டுமென்றுதான் உங்கள் உதவியைக்கொண்டு செங்கமலதாசைக் கொண்டுவந்தேன்-"

“கொண்டுவந்தீர்?”

“'செங்கமலதாசு ஆட்சிபுரியத் திறமையற்றவனாக இருக்கிறான். தனக்காகத் தெரியவேண்டும், அல்லது பிறர் சொன்னால் கேட்கவேண்டும்.”

“என்ன செய்கிறான்?”

“இந்த மாதிரி அவன் நாட்டை நடத்திவந்தால் நிச்சயம் அன்னியர் கைக்குப் போய்விடும் அது.”

“அதற்காக?”

வெங்கன்னா தீர்மானமாக, “விஜயராகவருடைய வம்சத்தைக் காட்டிலும் தஞ்சை நாடு பெரிது. செங்கமலதாசைக் காட்டிலும் நாட்டின் சுதந்திரம் பெரிது என்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டேன்” என்றார்.

“செங்கமலதாசை நீக்குவதற்கு நீர் செய்யும் இந்த முயற்சியில் உமது சுயநலம் வேலைசெய்யவில்லையா? உண்மையாகச் சொல்லும்!” என்று எக்கோஜி வெங்கன்னாவைக் கூர்ந்து கவனித்துக்கொண்டு கேட்டான்.

வெங்கன்னா ஏளனமாக, “சுயநலத்தை நான் தேடியிருந்தால், நானே இன்று தஞ்சை மன்னனாக இருக்கக்கூடும், தெரியுமா? அழகிரி நாயகரை விரட்டிவிட்டு செங்கமலதாசை ஏன் கொண்டுவருகிறேன்? செங்கமலதாசையே ஏன் இவ்வளவு வருஷம் கண்போலக் காத்துவருகிறேன்? இல்லை, எக்கோஜி! துரோகியின் ரத்தம் என் உடம்பில் இல்லை. துரோகியாயிருந்தால் இன்று சிம்மாசனத்திலிருப்பேன்! விஜயராகவர் ஆண்ட நாடு அடிமை நாடாகக் கூடாது எக்காரணத்தாலும்! இன்று செங்கமலதாசை நிர்த்தாக்ஷிண்யமாக நீக்க முன்வந்திருக்கிறேன் என்றால் என் மனத்திற்குத் தெரியும் என் வேதனை. சுலபமாக நான் அதைச் செய்யத் துணிந்துவிடவில்லை” என்றார்.

“நீர்தான் கோபுரம் தாங்கி பொம்மையோ? அவன் நாட்டை அவன் பார்த்துக்கொள்ளமாட்டானோ?”

“நமது மனத்திற்குக் கஷ்டமான ஒரு கடமையைச் செய்யாமல் இருப்பதற்காக அந்த மாதிரி பொறுப்பைத் தள்ளுவது சரியன்று. செங்கமலதாசு செய்வது நாட்டிற்குக் கெடுதல் என்று கண்டும் நான் சும்மா இருந்தால் அது நாட்டிற்குத் துரோகமாகாதா?”

“இனிமேல் ஒருவேளை நாட்டிற்குக் கெடுதல் ஏற்படலாம் என்று நினைத்து இப்பொழுதே நீர் ராஜத்துரோகம் செய்யலாமா?-”

வெங்கன்னா கோபத்துடன் குறுக்கிட்டு, “என் கடமையை நான் உம்மைக் காட்டிலும் நன்றாக அறிவேன். எனக்குப் பிள்ளைகுட்டி கிடையாது. பதவி வேண்டுமென்ற மோகமும் கிடையாது. நான் இச்சைப்பட்டிருந்தால் எதை வேண்டுமானாலும் சாதித்துக்கொண்டிருக்கலாம் - இன்றும் சாதித்துக்கொள்ளக்கூடும்” என்று ஆத்திரத்துடன் கூறினார்.

“முடியாது, நான் தடுப்பேன். செங்கமலதாசைக் காப்பாற்ற வேண்டுமென்பது எனக்கு சுல்தான் கொடுத்த உத்தரவு.”

“என்னை எதிர்த்து உம்மால் தனியாக இந்நாட்டில் ஒன்றும் செய்ய முடியாது - இல்லை – துடித்துப் பிரயோஜனமென்ன? உமது பலத்தை நீரே அறியவில்லையே? செங்கமலதாசை நீர் தனியாக இந்த சிம்மாசனத்தில் ஏற்றிவைத்திருக்க முடியுமோ? என் உதவியில்லாமல்? அழகிரி நாயகர் என்ன சாமானியர் என்று நினைத்துவிட்டீரோ, சண்டையின்றி உம்மை நாட்டுக்குள் விட்டுவிட?” என்று வெங்கன்னா குத்தலாகச் சொன்னார்.

எக்கோஜி ஆச்சரியத்துடன், “என்னை இப்படி உதாசீனமாகப் பேச உமக்கு என்ன தைரியம்!” என்று கேட்டார்.

“உதாசீனமில்லை - உண்மை! எக்கோஜி, நான் கூறியபடி தஞ்சைக் கோட்டையின் மீது நாளைக்குப் படையெடுத்து வருகிறீரா, சொல்லும்! நாழிகையாகிவிட்டது. நான் போகவேண்டும்.”

“மாட்டேன்!”

“ஏன்?”

“நீர் போகும் வழி எனக்குப் பிடிக்கவில்லை.”

“நீர் ஒரு வழி சொல்லுமே!”

“நான் துரோகியல்ல!”

வெங்கன்னா உதடுகள் துடிக்க “நான் பிராமணனாயிருந்தாலும் வாள்பிடிக்கத் தெரிந்தவன், எக்கோஜி!” என்று கத்தினார்.

“உண்மையைச் சொன்னால் உமக்கேன் பொத்துக்கொண்டு வருகிறது?”

“எது உண்மையென்று கண்டுவிட்டீர்? நாட்டைக் காப்பது துரோகமா?”

“உமது மன்னனை என்னிடம் காட்டிக்கொடுப்பது? அதற்கென்ன பெயர்?” என்று எக்கோஜி கேட்டார்.

“நீர் ஹிந்து - நாளைக்குப் பிறர் வந்து நாட்டைக்

கைப்பற்றிக்கொண்டால்?"

"அதெப்படி உமக்குத் தெரியும்?"

"இன்று மராட்டியர் தஞ்சையைக் கைப்பற்றிக்கொள்ள மறுத்தால் நாடு சீர்குலைந்து போவதில் சந்தேகமில்லை."

எக்கோஜி நல்ல வார்த்தையாக, "வெங்கன்னா, நீர் ஏன் என்னை இப்படித் தூண்டில் போட்டு இழுத்து சுல்தானுடைய இஷ்டத்திற்கு விரோதமாக நடக்கச் சொல்லுகிறீர்?" என்று கேட்கலானார்.

"எனக்காகவும் அன்று, உமக்காகவும் அன்று!-"

"ஏன், நீர்?..."

"நானா! தஞ்சையை உம்மிடம் ஒப்படைத்துவிட்டால் என் கடமை தீர்ந்துவிட்டது."

"வெங்கன்னா! ஏன் இந்த வெறி உமக்கு? செங்கமலதாசுக்குப் புத்தி சொல்லிப்பாரும். நான் கும்பகோணத்திற்குத் திரும்புகிறேன்."

வெங்கன்னா உணர்ச்சியுடன், "இனி ஒன்றும் பயனில்லை. எக்கோஜி! என் மனக்கோட்டை இடிந்து விழுந்துவிட்டது. செங்கமலதாசை நிகரற்றவனாகச் செய்யவேண்டுமென்று அவனைப் பிறந்தது முதல் தயார் செய்தேன். முடியவில்லை. நான் பட்ட சிரமங்களெல்லாம் வீண்! நாயகர்கள் இனி தலையெடுக்க முடியாது! சுகவாழ்வு அவர்கள் சௌரியத்தையும் புத்தியையும் குலைத்துவிட்டது. மராட்டியரே, முன்வந்து கைகொடும். பதினைந்து வருஷங்களாக நான் எதிரிகளிடமிருந்து காத்த இந்த நாட்டைப் பெற்றுக்கொள்ளும். சுல்தான் இனி உமது யஜமானன் அல்ல!" என்று கர்ஜித்தார்.

எக்கோஜி திகிலுடன் "வெங்கன்னா!-" என்று ஆரம்பித்தார்.

வெங்கன்னா ஆத்திரத்துடன், "பிடியும், இந்தாரும் ராஜ்யம்! யார் உமக்கு இம்மாதிரி கொடுக்கப்போகிறார்கள்?" என்று எக்கோஜி சொன்னதைக் காதில் போட்டுக்கொள்ளாமல் பேசிக்கொண்டே போனார்.

"நிஜமாவா?"

"உம்முடன் விளையாடவா இந்த நிசியில் இங்கே வந்து பேசிக்கொண்டிருக்கிறேன்? செங்கமலதாசை ஒன்றும் செய்வதில்லையென்று எனக்குச் சபதம் செய்துகொடும். அவனை நான் அயலூருக்கு அனுப்பப்போகிறேன். என் சொத்து முழுமையும் அவனுடையது. அவன் என் உயிர்" என்று சொல்லி வெங்கன்னா

திடீரென்று தன்வசமற்றுக் கண்ணீர் விடுத்தார்.

“பிறகு நீர்...?”

“நானா! நான் என்ன செய்யப்போகிறேனோ யார் கண்டார்கள்? என் வாழ்க்கைதான் வீணாகிவிட்டதே! ஆனால் நல்ல வேளையாக நீர் இருக்கிறீர். தஞ்சாவூரை தகப்பன் போலப் பாதுகாப்பீரா?” என்று வெங்கன்னா உடைந்த குரலுடன் கேட்டார்.

எக்கோஜி கண்ணீருடன், “செய்கிறேன், வெங்கன்னா!” என்று இரண்டே வார்த்தை சொன்னார்.

வெங்கன்னா திடீரென்று மறுபடியும் தன்வசமற்றுக் கண்ணீர் உதிர்த்துக்கொண்டு, “நாளைக்குக் காலையில் கோட்டையைத் தாக்கும்! என்ன?” என்று கேட்டார்.

“அதை நான் எப்படிச் செய்வது?”

“செய்யும்! நீர் நன்றாக இருப்பீர்!” என்று சுருக்கமாக சில வார்த்தைகள் சொல்லிவிட்டு வெங்கன்னா வெறி பிடித்தவர் போல வெளியே ஓடினார். எக்கோஜி பிரமித்துப்போய் வெகுநேரம் உட்கார்ந்திருந்தார். பிறகு எழுந்து போய் சேனையைத் தயார் செய்தார்.

மறுநாள் மராட்டிய சைனியம் வெகு சுலபமாக வெற்றியுடன் தஞ்சை கோட்டைக்குள் நுழைந்தது. அன்று மராட்டியர் வசம் வந்த நாடு மகமதியர் கைக்குள் போகாமல் ஆங்கில ஆதிக்கம் வலுக்கும் வரை சுதந்திரமாக இருந்தது.

வெங்கன்னாவின் எண்ணம் நிறைவேறிற்று.

ஆனால் வெங்கன்னாவோ துரோகி என்று பெயர் வைக்கப்பட்டு கடைசி காலத்தில் யாரும் அறியாத வாழ்வில் ஏங்கி இறந்தார்.

வெங்கன்னா செய்தது துரோகமா?

சரித்திரம் பதில் சொல்லட்டும்.

- பாரததேவி, 08.10.1939

# 17. லட்சிய வீரன்

“தாணாஜி! நீங்கள் சொல்லுவது எனக்குத் தெரியவில்லையா என்ன? நன்றாக அர்த்தமாகிறது. ஆனால் மகாராஜா ஜயசிங் சொல்லுவதும் முற்றிலும் சரி என்றுதான் தோன்றுகிறது எனக்கு” என்று சிவாஜி தன் மனத்திலிருந்ததைக் கடைசியாகத் தன் ஆத்ம சிநேகிதனிடம் வெளியிட்டார்.

“பாதுஷா அவுரங்கஜேப்பிடம் நாம் சத்தியத்தையும் தர்மத்தையும் கடைப்பிடித்தால் நிச்சயம் நாசமடைய வேண்டியதுதான் என்பது என் தீர்மானமான அபிப்பிராயம்.”

“எதிரி அதர்மத்தைக் கைப்பற்றினால் நாமும் அந்த வீழ்ச்சியில் - அது வீழ்ச்சிதானே? - அவனைப் பின்பற்றுவதா என்று ஜயசிங் கேட்கிறார். அதற்கு என்னால் பதில் சொல்ல முடியவில்லை.”

“ராஜ்ய விவகாரங்களில் ராஜதந்திர முறைகளின் அனுஷ்டானத்தில் தர்மத்தையும் சத்தியத்தையும் பற்றி நினைக்கக்கூடாதென்பதே என் கட்சி. உலக விவகாரங்களுக்கு ஒரு நியதியாக இருக்கும் அர்த்த சாஸ்திரமே நமக்கு ஆதாரம்.”

“தர்ம வழியாலும் சத்திய முறையாலும் வெற்றிகரமாக ராஜ்யம் ஸ்தாபிக்க முடியாது, அதிகாரம் செய்ய முடியாது என்றா நீங்கள் நினைக்கிறீர்கள்? நமது முன்னோர்கள் என்ன செய்தார்கள்? தர்ம யுத்தம் என்பது என்ன பின்?”

“அப்பொழுது காலதேசவர்த்தமானங்கள் வேறு. ஆகையால் தர்மமும் சத்தியமுமே உயர்ந்த முறையில் நடைபெற்றன.”

“தாணாஜி! நீங்கள் சொல்லுவது வேடிக்கையாக இருக்கிறது, அவற்றிற்குக் காலதேசவர்த்தமானங்களை அனுசரித்துத்தானா மதிப்பு? என் சத்தியம் வேறா? நமது தர்மம் வேறு, நமது மூதாதைகளின் தர்மம் வேறா? நன்றாக இருக்கிறது?!”

“வாழ்க்கை நிலைமைக்குப் பொருந்தாத சத்தியத்தாலும் தர்மத்தாலும் என்ன பயன்? நமது முன்னோர்கள் உயர் வாழ்வு வாழ்ந்த காலம், சத்திய யுகம். அப்பொழுது பாரத வர்ஷம் முழுமையும் ஒரு குடையின் கீழ் இருந்தது. ஒரு தர்மத்தின் - சனாதன தர்மத்தின் - ஆதிக்கத்தில் இருந்தது. எனவே உள்நாட்டுச் சச்சரவுகள் யாவும் அந்த உயர்ந்த முறையில் நடந்து தீர்ந்தன. இப்பொழுது நிலைமை மாறிவிட்டது.”

“எப்படி மாறி விட்டதென்கிறீர்கள்?”

“பாரத சமுதாயம் தர்மத்திலும் ராஜ்ய முறையிலும் சிதைவுபட்டுவிட்டது. நாடு பல்வேறு சிற்றரசுகளாகப் பிரிந்து ஏக சக்கரத்தை நிராகரித்தது முதலில்.”

“எதனால்? தர்மத்தாலா?”

“அல்ல. ஏக சக்கராதிபத்தியத்தின் கீழ் நாட்டில் ஏற்பட்ட அமைதியும் சுகமும் செழிப்பும் ஒரு கால அளவிற்குப் பிறகு மக்களுக்குச் சலிப்பு கொடுத்துவிட்டது. அமைதியே ஒரு தேக்கமாகிவிட்டது. ஆதிபத்தியமும் வெகுகாலத்துச் செருக்கில் திளைத்து சோம்பலும் சோர்வும் கொண்டு பலவீனமாகிவிட்டது. அதிருப்தி கட்டு மீறினதால் ஏகசக்கரம் உடைபட்டுப் பல சிற்றரசுகள் தோன்றின. அன்றே கலி ஆரம்பமாயிற்று.”

“அதனால்?”

“அதனால் அதுவரை தடைபட்டுக்கிடந்த ஆபத்து பாரத வர்ஷத்தை ஆக்கிரமிக்க ஆரம்பித்தது. ஒரு சக்கரத்தின் திரண்ட பலம் ஒருமுகமாக இருந்தபொழுது அன்னியர் படையெடுப்பென்பதே நடக்காததாய் இருந்தது. நாடு பிளவுபட்டதும் வடமேற்கிலிருந்து முதல் அலையாக யவன படையெடுப்பு வந்தது. உள்நாட்டுச் சச்சரவும் துவேஷமும் அன்னியனுக்கு அனுகூலம் செய்தது. சந்திரகுப்த மௌரியனின் காலத்தில் ஆரம்பித்தது கலவரம்.”

“அவர்தான் மறுபடியும் சாம்ராஜ்யம் ஸ்தாபிக்க நாட்டை ஒன்றாக்க முயற்சி செய்தாரே!”

“அன்னியன் ஒருதரம் உள்ளே வந்த பிறகு அலைமேல் அலையாக அந்நியர் படையெடுப்பு அதிகமாகிவிட்டதால் சாம்ராஜ்ய நினைவு, ஏகசக்கர லட்சியம் எல்லாம் நடக்கமுடியாததாகிவிட்டது. அப்பொழுதுதான் முதல் முதலாக தர்மம், சத்தியம் - எல்லாம் பலனற்றன. அதனால்தான் சந்திரகுப்தனின் ஆட்சிக்காலத்தில் சாணக்கியன் அர்த்த சாஸ்திரம் எழுதி ராஜதந்திரத்தை உண்மைக்குப் பதிலாக சமயோசிதவாதமாக ஸ்தாபித்தார்.”

“சனாதன தர்மம்தான் நமது நாட்டில் ஏகசக்கரத்திற்குப் பதிலாக ஆட்சி புரிந்ததே?”

“அதுவும் புத்த, ஜைன மதங்கள் தோன்றினதும் தகர்ந்துவிட்டது. அதன் சில குறைகளை எதிர்த்து புத்த பகவானும் ஜைன முனியும் சீர்திருத்தம்

செய்ய முயன்றார்கள். அவர்கள் முயற்சி விபரீதமாக முடிந்தது. மதத்துவேஷத்தில் சத்தியமும் தர்மமுமே இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன. தேச சச்சரவுகளும் அன்னிய நாட்டு படையெடுப்புகளுமாகச் சேர்ந்து நாட்டை நிலைகுலையச் செய்துவிட்டன.”

பாரத வர்ஷம் பிளவுபட்டு புண்ணிய பூமி பாப பூமியான சோகக் கதையை தாணாஜி சுருக்கமாகச் சொன்னபோது சிவாஜி அந்தந்த சமயங்களில் நிகழ்ந்த கஷ்டங்களையும் வீரர்களின் வீழ்ச்சிகளையும் எண்ணிப்பார்த்துக்கொண்டே வந்தார்.

ஆமாம். இந்தியா அன்னியருக்கடிமையான கதை ஒரு மகத்தான சோக சரித்திரம். ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஹிமயமலையிலிருந்து சிங்களம் வரையிலும், சிந்துவிலிருந்து கங்கை வரையிலும் ஒரு அரசன், ஒரு தர்மம், ஒரு சமயம் என்று இருந்தது. அப்பொழுது அன்னியர் வந்தாலும் பாரத சமுதாயத்தில் ஆகர்ஷணமாகிவிட்டார்கள்; எதிர்த்து நாட்டை ஆக்கிரமிக்கவும் முடியவில்லை; இங்கே தனித்து இருக்கமுடியவில்லை.

ராமனுடைய விரதம்போல் பாரத தேவியும் ஒரு வாக்கு, ஒரு தர்மம், ஒரு பாணம் கொண்டிருந்தாள். அவளுடைய விரதம் கலைந்தது எதனால்?

அந்த தர்மமும் அந்த ஆதிபத்தியமும் எவ்வளவோ முன்யோசனையுடனும் விசால புத்தியுடனும் வகுக்கப்பட்டிருந்தும் காலத்தால் ஏற்படும் தளர்ச்சியும் மூப்பும் - சாவுங்கூட - அவற்றை விடவில்லை. காலதேசவர்த்தமானங்களுக்கு மீறினதாகவேதான் அன்னையின் ஆதிகாலப் புதல்வர்கள் தர்மத்தை விசாலமாக அமைத்தார்கள். ஆனால் அதைப் பிற்காலத்தில் கையாண்டவர்கள் காலதேசவர்த்தமானங்களின் கட்டுக்கடங்கினவர்களாகி அதைச் சரிவரப் பரிபாலிக்கத் திறமையற்று போனார்கள். அப்பொழுதப்பொழுது செய்யவேண்டிய சில மாறுதல்களையும் சில்லறை மராமத்துகளையும் செய்யத் தவறினார்கள்-செய்ய மறுத்தார்கள்.

ஆனால் மகா புருஷர்கள் மட்டும் தோன்றாமல் இல்லை. அவர்கள் அவ்வப்போது குறைகளைக் கண்டு நிவர்த்திக்க பெரும் தியாகங்கள் செய்தார்கள். ஆனால் ஆதியில் சமூகமே ஒன்றாக இருந்த பொழுது முனிவர்கள் அமைத்த ஸ்தாபனத்தை பிறகு நாடு சிதைந்த பிறகு தோன்றின தனிமனிதர்கள் சீர்படுத்த முடியவில்லை. புத்தர், ஜைனர், சங்கரர், வித்யாரண்யர், சந்திரகுப்தன், அசோகன், ஹர்ஷன், ராஜேந்திர

சோழன், கிருஷ்ணதேவராயர் எல்லோரும் வரிசையாகத் தோன்றி தர்மத்தையும் ஏகசக்கராதிபத்தியத்தையும் மறுபடி நிலைநிறுத்த பல தடவை பாடுபட்டு முயன்றார்கள்.

***

“அப்பேர்ப்பட்ட அசகாயசூரர்கள் முயன்று முடிக்க முடியாத காரியத்தை நாம் எப்படி சாதிக்கப்போகிறோம். தாணாஜி!” என்று சிவாஜி கலக்கத்துடன் யோசித்தார்.

“முடியும் முடியாதென்பதைப்பற்றி யோசிக்க நாம் அதிகாரிகள் அல்ல, சத்ரபதி! சத்திய யுகம் முடிந்து கலி ஆரம்பமாகும் பொழுது நம் யுக தர்மத்தை பகவான் கிருஷ்ணன் கீதையில் நிர்த்தாரணம் செய்துவிட்டார். கடமையைச் செய்வதுதான் நமது தர்மம். கடமைதான் தர்மம்.”

“ஆ, நீங்கள் கீதையைப் பற்றிச் சொன்னதும் நினைவு வருகிறது. தாதாஜியும் அன்னை ஜீஜாபாயும் எப்பொழுதும் கடமையைப் பற்றித்தான் எனக்குச் சொல்லுவார்கள். கடமையைக் கைப்பற்றிய பிறகு அவர்கள் செய்த உபதேசத்தையே மறந்துவிட்டேனே!”

“மறக்கவில்லை மகாராஜா! அதில் அவ்வளவு ஈடுபட்டுவிட்டீர்கள். தாதாஜியையும் அன்னையையும் நீங்கள் மறக்கமுடியுமா?”

பழைய நாட்களின் நினைப்பும், தாய் முகமும் தாதாஜி கன்ஹதேவரின் முகமும் ஞாபகம் வந்ததும் சிவாஜி உணர்ச்சிப் பெருக்கில் அப்படியே ஸ்தம்பித்துப்போய் உட்கார்ந்துவிட்டார். இடத்தையும் காலத்தையும் சுற்றுணர்வையும் மறந்தார். அஞ்சா நெஞ்சம் படைத்த மகாராஷ்டிர வீரன் கண்களில் திடீரென்று நீர் பெருகிற்று. உதடுகள் நடுங்கின.

தாணாஜி அந்த மகத்தான காட்சியைக் கண்டு பரவசமானார். அவர் வாய்திறக்க முயலவில்லை.

***

அந்தி மயங்கி இருட்டுகிற நேரம். பவானியின் கோவிலில் சாயங்கால தீபாராதனை செய்கிற வேளை நெருங்கிவிட்டபடியால் மகாராஜாவுக்குத் தகவல் வந்தது. அர்ச்சகரின் தகவலைக் கொண்டுவந்த சேவகனை தாணாஜி மௌனமாகச் சைகை காட்டி வெளியே போகச் சொல்லிவிட்டார். சிவாஜியின் உள்ளத்திலல்லவா அப்பொழுது ஜகஜ்ஜோதியான தீபாராதனை நடைபெற்றது!

கோட்டையின் அந்த மேல் அறையிலும்கூட இருள் கவிய ஆரம்பித்தது.

விளக்கேற்ற வந்த ஆளை தாணாஜி வெளியே போகச் சொல்லிவிட்டார். சிவாஜியின் யோகத்தை எக்காரணத்தாலும் கலைக்கக்கூடாதென்று அவர் கண்டார்.

திடீரென்று கோவில் மணி அடிக்க ஆரம்பித்தது. அந்த ஓசை மலைச்சாரல்களில் போய் எதிரொலித்து நடுங்கி அடங்கியது. அப்பொழுதும் சிவாஜி அசையவில்லை.

வாலிபன் சிவாஜி ஜீஜாபாயின் அருகில் ஒரு சாளரத்தின் அருகில் உடகார்ந்துகொண்டு சரத்திரத்தின் வீரக் கதைகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறான். ஒரு கதையை முடித்துவிட்டுத் தாய் மகனை அன்புடன் பார்த்து "சிவாஜி, நீயும் ஒருநாள் மகாராஷ்டிரத்தின் உயர்விற்காக வீரச் செயல்கள் செய்து முடிந்தால் என் உள்ளம் குளிரும். நீ க்ஷத்திரியன்; நீ வீரன்; பரம்பரைக் குணங்களும் சுபாவகுணங்களும், தாதாஜி புகட்டிய செயல் குணங்களும் உன்னிடம் பெருமிதமாக இருப்பதால் நீ நிச்சயம் பெரிய காரியங்கள் செய்வாய். நிச்சயம். அது சத்தியம்!" என்றாள்.

அப்பொழுது சிவாஜி "எப்படி சத்தியம் என்கிறாய்?" என்று கேட்டான்.

"நான் வீரனின் மனைவி, வீரனின் தாய். என் உள்ளம் சுத்தமானது. அதில் தென்படுவதுதான் சத்தியம்" என்று ஜீஜாபாய் சத்தியத்தை சிவாஜிக்கு நிர்ணயம் செய்துகாட்டினாள்.

***

நினைவு வரிசையில் அந்த இடத்திற்கு வந்ததும் சிவாஜி மெய்மறந்து மெதுவாகப் பேசலானார்.

"ஆமாம். அன்னை பவானியின் ஆவேசத்துடன் அன்று சொன்னது சத்தியம். தூய உள்ளத்தில் கடமையென்று படுவதுதான் சத்தியம், நிச்சயம் என்று படுவதும் சத்தியம். ஆமாம்... கடமைதான்... கடமையைத் தவிர நமக்கு வேறு அதிகாரமில்லை... எனக்கு!"

"ராஜா ஜயசிங்கும் அதைத்தான் செய்கிறார். அவுரங்கஜேப்பிடம் சேனாதிபதியாக இருந்து கடமையைச் செய்துதானே அவரும் சத்தியத்தைக் கடைபிடிப்பதாக எண்ணுகிறார்?" என்று தாணாஜி சமயம் பார்த்து மெதுவாகச் சொன்னார்.

சிவாஜிக்கு உடனே சுய நினைவு வந்துவிட்டது.

"நீங்கள் சொல்லுவது சரிதான் தாணாஜி! ஆனால் நான் இப்பொழுது அவுரங்கஜேப்பின் அழைப்பிற்கிணங்கி டில்லிக்குச் செல்வது

சமயோசிதம் அல்ல என்கிறீர்களே?"

"ஆமாம், அவுரங்கஜேப் நிச்சயம் உங்களுக்குத் தீங்கிழைப்பார். அவர் அழைப்பில் வஞ்சனை இருக்கிறது என்று என் மனதில் படுகிறது."

"மகாராஜா ஜயசிங் போகச் சொல்லுகிறார். அவர் சத்தியவாதி."

"அவுரங்கஜேப் அவருடைய சத்தியத்திற்குக் கட்டுப்பட்டால்தானே?"

"என்னுடைய க்ஷேமத்திற்குத் தான் ஜவாப்தாரியென்றும் நான் டில்லி போவதால் நம் காரியத்திற்கே நன்மை இருக்கிறதென்றும் ஜயசிங் சொல்லுகிறார். அவர் உறுதி என் சமயோசித புத்தியை வென்றுவிட்டது. டில்லிக்குப் போவதாக வாக்குக் கொடுத்துவிட்டேன்!"

"அடடா! காரியம் கெட்டுவிட்டதே!" என்று தாணாஜி கத்தினார்.

"உண்மையாக நடந்துகொள்வதால் காரியம் கெடாதென்றே எனக்கும் தோன்றிவிட்டது. தாற்காலிகமாக இடர்ப்பட்டாலும் முடிவில் உண்மை வழிக்கு நிச்சயம் வெற்றிதான்."

"என்ன காரியம் செய்துவிட்டீர்கள்?"

"நல்ல காரியம்தான்."

"நல்லதாக வேண்டுமே!"

"ஆகும். அதைப்பற்றி என்ன கவலை? செய்யவேண்டியதை உண்மையாகச் செய்வோம். அதுதானே தர்மம்?" என்றார் சிவாஜி தீர்மானமாக.

தாணாஜி மேலே பேசவில்லை.

***

சிவாஜி ஜயசிங் யோசனையைக் கேட்டு டில்லி சென்றதும், அங்கே அவுரங்கஜேப் அவரை அவமதித்துச் சிறையிட்டதும், சிவாஜி தப்பித் திரும்பி வந்ததும் சரித்திரம்.

அந்த சம்பவத்தின் மூலம் மகாராஷ்டிரத்திற்கு நன்மைதான் ஏற்பட்டது. உணர்ச்சிவசப்பட்டு தேசமே ஒருமுகமாக மும்மரித்து வீரச் செயல்கள் செய்தது. வீரர்கள் மகாராஷ்டிர சாம்ராஜ்யத்திற்கு அடிகோலினார்கள்.

- 1943

---

[1] இன்று ஒரு கிராமமாக இருக்கிறது. கும்பகோணத்திலிருந்து உடையார் பாளையம் போகும் பாதையில் இருக்கிறது.